# கணியான் கூத்து





டாக்டர் இரா. பாலசுப்பிரமணியன்

# கணியான் கூத்து

டாக்டர். இரா. பாலசுப்பிரமணியன்
எம். ஏ., எம்ஃபில்., பி. எச். டி., டி. ஜி. டி.
தமிழ்த்துறை & ஆய்வுமையம்
தூயசவேரியார் கல்லூரி
பாளையங்கோட்டை–627002.

சத்யா வெளியீடு
புவனேஸ்வரி இல்லம்
57, சிவன் மேல ரதவீதி
பாளையங்கோட்டை-627002.

# BIBLIOGRAPHICAL DATA

| | |
|---|---|
| Title of the book | ... Kanian Kuttu |
| Author | ... Dr. R. BALASUBRAMANIAN; M. A., M. Phil, Ph. D., D. G. T., Dept. of Tamil & Research centre, St Xavier's College, Palayamkottai-627002. |
| Publisher | ... Sathya Publications Puvaneswari Illam, 57, Sivan West Car Street, Palayamkottai-627 002. |
| Publication Number | ... 1 |
| Language | ... Tamil |
| Edition | ... First |
| Date of Publication | ... 1986 |
| Paper Used | ... 10.9 Kg. White Printing Paper |
| Size of the book | ... 18.5 CM X 12.5 CM |
| Printing types used | ... 10 pt. |
| Number of Pages | ... xix + 68 = 87 |
| Price | ... Rs. 10-00 |
| Printers | ... THE UMA PRESS, 25, Railway Feeder Road, Tirunelveli-6. Phone: 4900 |
| Subject | ... Folklore: Folk Arts |
| Special Information | ... This is the first Book on Kanian Kuttu, a traditional folk Performance. |

Dr. (Mrs.) RATHA THIAGARAJAN, M.A. Ph. D.
VICE-CHANCELLOR

Off. Ph. 2584
ALAGAPPA UNIVERSITY
ALAGAPPA NAGAR
KARAIGUDI-623004.

# அணிந்துரை

மேலை நாடுகளில் பன்முகமாக ஆய்வு செய்யப்பட்டுவரும் நாட்டுப்புறவியல், சில்லாண்டுகளாகத் தமிழறிஞரின் கருத்தை ஈர்த்துள்ளது. இவ்வியல் ஆய்வாளர் நூல்களில் காணக்கூடிய செய்திகள் சிலவே. ஆயின் பரந்துபட்ட மக்கட் சமுதாயத்தில் இவ்வியலின் பல்வேறு துறைகளாகிய கதை, பாடல், கலைகள், விளையாட்டு, பழமொழி, விடுகதை முதலியன பற்றிய விரிந்து பட்ட செய்திகள் நிரம்பக் கிடைக்கின்றன. களஆய்வு முறையில், இவற்றை வழக்கில் கொண்ட மக்களைக் கண்டு உரையாடி, செய்திகளைத் தொகுத்து இன்றைய ஆய்வாளர் சமுதாயப் பண்பாடு, மானுடவியல், இலக்கியம், கலை முதலிய கண்ணோட்டத்தில் அவற்றை ஆய்ந்து, நூல் எழுதி வருகின்றனர்கள்.

இவ்வகையில் டாக்டர். இரா. பாலசுப்பிரமணியன் அவர்கள் சில்லாண்டுகட்கு முன் நாட்டுப்புற விளையாட்டுக்கள் பற்றி மதிப்புறும் ஆய்வுநூல் எழுதி உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் வாயிலாக வெளியிட்டார். அவர் இதுகாலை, தென்றமிழ் நாடு என வழங்கும் திருநெல்வேலிச் சீமையில் மட்டும் வழங்கிவரும் 'கணியான் கூத்து' என்ற கலையையும் அதனைத் தொழிலாகக் கொண்டுள்ள கலைஞர்களையும் பற்றிக் கள ஆய்வு முறையில் ஆராய்ந்து ஓர் அறிமுக நூலினை வெளியிடுகின்றார். கூத்துக்கலையின் பண்பாட்டு மதிப்பினை ஆய்ந்தறியும் முயற்சி இந்நூலில் மேற்கொள்ளப்பட்டுள்ளது.

சங்கப் பாடலாகிய மலைபடுகடாம் கூத்தராற்றுப் படை எனவும் வழங்கும். அதில் கூத்தர் 'கண்ணுவர்' என்றும் அவ

ரோடு யாழ்வாசித்துப் பாடும் பாணரும், விறல்பட ஆடும் மகளிராகிய விறலியரும் சேர்ந்து கலைத்தொழில் நடத்தியதை மலைபடுகடாம் எடுத்துக் கூறுகின்றது. இப்பாணர்கள் முழவு, ஆருளி, பாண்டில், தட்டை, பதலை என்ற தாளவாத்தியங்களை வாசித்தலில் வல்லவர் என்று இந்நூல் கூறும். கணியான் கூத்து என்ற கலையை நிகழ்த்தும் கலைஞர் குழுவிலும் பாடகர், மகுடம் என்னும் தாளவாத்தியம் வாசிப்போர், காலில் சலங்கை கட்டிக் கொண்டு சிறிய அளவில் அசைவுதலும் நடிப்பும் காட்டும் பெண் வேடதாரிகள் ஆகியோர் இருப்பதை இவ்வாய்வாளரின் அறிமுகத்தால் அறிந்து, பழங்கால மரபு இன்றும் தொடர்ந்து வருதலை எண்ணி மகிழ்கின்ருேம்.

டாக்டர். இரா. பாலசுப்பிரமணியன் தற்காலக் கள ஆய்வு முறைகளான பேட்டி காணல், உற்று நோக்கல் முறைகளில் கணியான் கூத்துக் கலைஞர்களிடம் செய்திகளை நேரில் பெற்று நன்முறையில் இவ்வாய்வை வழங்கியுள்ளார்.

கணியான் கூத்து, சுடலைமாடன் என்ற சிறுதெய்வ வழிபாட்டின் ஓர் அங்கமாக நடைபெறுவது என்றும், செவிவழி வழங்கும் புராணக்கதையின்படி கணியான் என்பவன் சிவபெருமானுடன் தொடர்புடையவன் என்று நம்பப்படுகிருன் என்றும், சிவபெருமானே சுடலைமாடன் என்ற பெயர் கொண்ட நிலையில் கிராம மக்களால் சிறுதெய்வம் என வைத்து வழிபடப் படுகின்ருர் என்றும், இக்கூத்திற்குச் சமயத்தோடுள்ள தொடர்பை இவ்வாய்வாளர் ஆய்ந்து கூறுகின்ருர்.

அடுத்துக் கணியான் கூத்துக் கலைஞரின் வாழ்க்கை நிலையை எடுத்துக் காட்டுகின்ருர். உண்மையில் தாழ்த்தப்பட்ட இனத்தவராய்த் தீண்டாதார் என்று கருதப்பட்டுக் கிராமங்களில் வறிய நிலையில் வாழ்ந்து, தம் பரம்பரைத் தொழிலான இக் கூத்துக் கலையை விடாது பயின்று வருவதைக் காட்டுகின்ருர்.

பின்னர் கணியான் கூத்தினை விளக்கப் புகுந்து, அது கதைமொழி, பாட்டு என்றும், கதைகளைப் பாட்டாகக் கூறி வரும்போது, மகுடம் என்ற தாளவாத்தியம் முழங்கப்படும்

என்றும், பெண் வேடந் தாங்கியோர் பாட்டின் பொருளுக்கு ஏற்ப அபிநயம் பிடிக்காமல், சிறு அசைவுகளாலும் சிறு அளவினதாகிய நடிப்பாலும் மறைமுகமாக, கதைப் பாத்திரத் தையோ கதை நிகழ்ச்சியையோ நன்கு உணர்ந்து கொள்ளச் செய்வர் என்றும் கூறுகின்ருர். இக்காரணத்தாலும் இக்கூத்து செவிக்கும் கண்ணுக்கும் விருந்தாதலேக் காட்டுகின்ருர்.

பின்னர், இக்கூத்திற் பாடப்படும் கதைப்பாடல் பலவற் றுள், காளிகதை என்ற அம்மன் பாட்டின் கரு, அமைப்பு, போக்கு, பாத்திரப் படைப்பு ஆகியவற்றை ஆய்ந்து. அதன் இலக்கியத் தன்மையை எடுத்துக்காட்டுகின்ருர். கதைகூறும் உத்திகள் பலவற்றைப் பயன்படுத்திப் பாடல் பாடப்படுவதை விளக்குகின்ருர். இக்கதையின் மூலபாடத்தையும் பின் இணைப் பாகத் தந்துள்ளார்.

கணியான் கூத்தில் இயல், இசை, நாடகம் என்ற முத்தமி ழும் இணைந்துள்ளமை இவ்வாய்வில் நன்கு புலப்படுத்தப் படுகின்றது. நாட்டுப்புறக் கலேகளில் சிறந்த வில்லுப்பாட்டு என்பதை ஒத்துக் கணியான் கூத்து விளங்குவதை இவ்வாய் வினல் அறிகின்ருேம்.

மங்கி மறையும் நிலேயில் இருக்கும் கணியான் கூத்து என்ற நாட்டுப்புறக் கலேயை ஆய்ந்து நூல் எழுதியதன் வாயிலாக, இந்நூலாசிரியர், இக்கலேயைத் தமிழகத்தார்க்கு அறிமுகம் செய்து, இதில் ஆர்வம் கொள்ளச் செய்துள்ள நன் முயற்சியைப் பெரிதும் பாராட்டுகின்றேன்.

டாக்டர். இராதா தியாகராஜன்,

பேராசிரியர். **கோ. சங்கரராசுலு,**
எம்.ஏ., எம்.லிட்.,டி. ஆந்த்ரோ
பதிவாளர்
அழகப்பா பல்கலைக்கழகம்
காரைக்குடி — 623004.

# ஆய்வுரை

தமிழகத்தின் மிகப்பழமையான கூத்து வகைகளுள் ஒன்று கணியான்கூத்து. இதனை மகுடாட்டம் என்றும் குறிப்பிடுகின்றனர். வழிவழியாக இக்கூத்தினைக் கணியான் என வழங்கப்படும் பிரிவினர் குலத்தொழிலாகக் கொண்டு நிகழ்த்தி வருகின்றனர். நெல்லை, குமரி மாவட்டங்களில் மட்டுமே இக்கூத்து நிகழ்த்தப்படுகின்றது.

டாக்டர் இரா. பாலசுப்பிரமணியன் தமிழகத்தின் பழங் கலைகளை ஆய்வதில் மிகுந்த ஆர்வமுடைய இளைஞர். ஆய்வு முறைகளில் தேர்ந்த பயிற்சியுடைய இப்பேராசிரியர் பேட்டி முறையிலும், உற்றுநோக்கல் முறையிலும் இவ்வாராய்ச்சியை நிகழ்த்தியிருக்கின்றார். அதன் விளைவே இச்சிறுநூல். எதிர் காலத்தில் இக்கூத்தின் தொடக்கம், வளர்ச்சி, நிகழ்த்துமுறை ஆகியவை பற்றிய விரிவான ஆராய்ச்சியை நிகழ்த்துவதற்கு இந்நூல் ஒரு சிறந்த முன்னோடியாக அமையும்.

பிறமாவட்டங்களில் விழா எனக் குறிப்பிடப்படும் சிறப்பு நெல்லை, குமரி மாவட்டங்களில் கொடை எனக் குறிப்பிடப்படுகின்றது. இக்கொடைகளில் இன்றியமையாதது ஒரு கலை நிகழ்ச்சியாகும். வில்லுப்பாட்டு அல்லது கணியான்கூத்தாக இம்மாவட்டங்களில் கலைநிகழ்ச்சி அமைகின்றது. இவ்விரண்டிலும் பழமைமிக்கது கணியான் கூத்தே. வில்லுப்பாட்டினை ஒரே சாதியினர் நிகழ்த்தவேண்டும் என்பதில்லை. ஆனால் கணியான் கூத்தோ 'கணியார்' என்ற சாதியரால் மட்டுமே நிகழ்த்தப் பட்டு வருகின்றது.

மக்களினத்தின் ஆதிக்கூத்துக்களில் பல சமயச்சடங்குத் தன்மை பெற்றவையே. சங்ககால வெறியாடல் இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டாக அமைகின்றது.

கணியான் கூத்தோடு தொடர்புடைய சுடலைமாடன், மகுடம். இரத்தப்பலி ஆகிய கூறுகள் ஆழ்ந்து ஆராயப்படுதற் குரியன. மகுடம் என்பது மகிஷம் என்பதன் திரிபாகலாம். மகிஷம் அல்லது எருமையைத் தங்கள் குலமரபுச் சின்னமாகக் கொண்டவர்களின் ஆட்டமாக இது பழங்காலத்தில் இருந் திருத்தல் கூடும். ஆதி மனிதனின் உள்ளத்தில் இரத்தத்தைப் பற்றிய பலவிதமான கற்பனைகள் இருந்திருக்கின்றன. நரபலி யின் அடிப்படையும் இரத்தப் பலியில் கலந்துள்ளது. இன்றும் காணப்படும் குங்கும ஆரத்தியும், எலுமிச்சம் பழத்தில் குங்குமம் தடவிக் கழிப்புக் கழித்தலும் பழைய இரத்தப்பலி களின் எச்சங்களே. கணியன் கூத்தில் இரத்தம் காட்டுதல் என்னும் நிகழ்ச்சி இன்னும் துருவி ஆராயப்படுதல் வேண்டும். பேய்ச்சி, முண்டம் போன்ற தெய்வங்கள் மனிதர்களின் இரத்தம் கிடைத்தால் ஒழிய நிறைவு அடைவதில்லை என்னும் கருத்தும் ஊன்றிப் பார்க்கப்பட வேண்டும்.

தமிழகத்தின் தென்கோடி மாவட்டங்கள் மிகப் பழையத் தமிழக மரபுகள் பலவற்றை வாழவைத்துக் கொண்டிருக் கின்றன. அத்தகைய மரபுகளுள் ஒன்றே இக்கூத்து.

கணியார்களைப் 'புலவர்' எனவும் குறிப்பதுண்டு. கூத்த ராற்றுப்படையாகிய 'மலைபடு கடாத்தில்' கூத்தன் 'புலவ' என விளிக்கப்படுதல் உற்றுநோக்கத்தக்கது. ஒருகால் அப் பழங்கூத்தர்களின் வழியினராகவே இக்கணியார்கள் இருத்தல் கூடும்.

அலைஅலையாக வந்த புதிய புதிய மரபுகள் பல கலந்த ஒரு கலப்பாகவே இன்று இக்கூத்துக் காணப்படுகின்றது. இருப்பினும் பல அடுக்குகள் கொண்ட இக்கூத்தினை ஒவ்வொரு அடுக்காக மீட்டுருவாக்கம் செய்தால் மிகப் பழங் காலம் வரை செல்லக்கூடும். எழுதாக் கிளவியாக ஒரு சரடும் இலக்கிய வடிவம் பெற்றதாக மற்றொரு சரடுமாய்ப் பின்னப்

பட்டு இக்கூத்து வளர்ந்து வந்திருக்கலாம். இவற்றைச் சிக் கறுத்துப் பார்க்கக் கூடுமானல் சுடலேமாடன் வழிபாட்டின் தோற்றம் விளக்கப் பெறும். சுடலேயோடு தொடர்புடை மையால் அச்சாதிப் பெண்கள் பார்த்தல் கூடாது என்ற விலக்கு (Tabu) ஏற்பட்டிருக்கலாம்.

இத்தகைய சிந்தனேகளேத் தூண்டும் வகையிலும் எதிர் கால ஆய்வுகளுக்கு வழிவகுக்கும் முறையிலும் இக்கூத்தின் அனேத்துப் பகுதிகளேயும் உற்று நோக்கி ஆய்ந்து வெளி யிடப்பட்டுள்ள ஆசிரியரின் அரும்முயற்சி பாராட்டுதற்குரியது.

இது காறும் எவரும் முனேந்து நிகழ்த்தாத இவ்வாராய்ச் சிப்பணியைத் திறம்பட நிகழ்த்தியுள்ள ஆசிரியர் இன்னும் இவ்வாறு மறைந்து கொண்டிருக்கும் பல்வகைப் பழங்கலே வடிவங்களேத் தாமே ஆய்வதோடு பிறரும் ஆய்வதற்கு உதவி பல புரிந்து அருந்தொண்டு புரிதல் வேண்டும்.

அவர்தம் ஆய்வுப்பணி சிறப்பதாகுக.

**கோ. சங்கரராசுலு**

டாக்டர் ச.வே. சுப்பிரமணியன்
இயக்குநர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
டி.டி.டி.ஐ. அஞ்சல், சென்னை–600 113.

# வாழ்த்துரை

டாக்டர், இரா. பாலசுப்பிரமணியன் அவர்களுடைய 'கணியான் கூத்து' அறிமுக நூலைப் படிக்கும் வாய்ப்புக் கிடைத்துப் பெரிதும் மகிழ்ச்சி அடைகிறேன். ஆங்கிலத்தில் கணியான் கூத்துப் பற்றிய அறிமுகம் இந்த நூலில் கொடுக்கப்பட்டுள்ளது மிகுந்த பயனுடையது. பிறநாட்டினர்க்கும் 'கணியான் கூத்து' பற்றித் தெரிந்து கொள்ளத் துணையாக அமையும். 'கணியான் கூத்து' பற்றிய திட்டப்பாங்கினைத் தெளிவாகவும் 'கணியான் கூத்து' தெரிந்த கலைஞர்களோடு கலந்துரையாடியும் செய்துள்ளது மிகவும் பாராட்டத் தக்கது. 'கணியான் கூத்து' நெல்லை, குமரி மாவட்டங்களில் தான் மிகுதி. சில மாவட்டங்களில் சில கூத்துக்கள் மிகுதியாக அமைகின்றன. சான்ருக, தெருக்கூத்து வடாற்காடு, தென்னாற்காடு, செங்கல்பட்டு மாவட்டங்களில் மிகுதியாக உள்ளது. மரப்பாவைக் கூத்து தஞ்சாவூர், கும்பகோணம் பகுதிகளில் இருக்கிறது. மதுரை, இராமநாதபுரம் மாவட்டங்களில் கரக ஆட்டம் காவடி ஆட்டம், புரவியாட்டம் ஆகியன சிறப்பாக அமைகின்றன.

'கணியான் கூத்து' பற்றி ஆய்வாளர்கள் டாக்டர். இராமசாமி, திரு. அனந்தசயனம், டாக்டர். நவநீத கிருட்டிணன் போன்றவர்கள் ஆய்வுசெய்து கொண்டிருக்கிருர்கள். தமிழக அரசு கல்லிடைக் குறிச்சி இராமசுப்பு அவர்களுக்கு 'கலைமாமணி' பட்டம்கொடுத்துச் சிறப்பித்திருக்கிறது. 'கணியான் கூத்து'பற்றிய வரலாறு பிறர் தெரிந்து கொள்ளும் 'முறையில் அமைந்துள்ளது நினைக்கத்தக்கது. நாட்டுப்புறக் கலைகளுள் கணியான் கூத்துக்குரிய இடமாக செவிப்புலக் கட்புலச் செய்திகள் இணைந்து மகிழத்தக்கதொன்று என்ற கருத்து

வரவேற்கத்தக்கது. வில்லுப் பாட்டும், கணியான் கூத்தும் மிகுந்த தொடர்புடையவை என்பதை நாம் அறிவோம்.

'காளிகதை' என்ற கணியான் கூத்தின் மூலம் கொடுத்துள் ளது மிகவும் பாராட்டத்தக்கது. நல்ல முறையில் ஆய்வு உணர் வோடு 'கணியான் கூத்து' பற்றிய அறிமுக நூலைத் தந்துள்ள டாக்டர். இரா. பாலசுப்பிரமணியன் அவர்களைப் பாராட்டி மகிழ்கின்றேன். இதுபோன்ற பல நல்ல நூல்களை டாக்டர். இரா. பாலசுப்பிரமணியன் அவர்கள் தமிழ் உலகுக்குத் தர வேண்டும் என வேண்டி வாழ்த்துகின்றேன்.

அன்புள்ள,

**ச.வே. சுப்பிரமணியன்.**

அருட்தந்தை **ஞா. பாக்கியராஜ்** S. J.,
முதல்வர்
தூயசவேரியார் கல்லூரி
பாளையங்கோட்டை — 627002.

# வாழ்த்துரை

'நாட்டுப்புறவியல்' என்ற புதியதொருதுறை தற்பொழுது நம்நாட்டில் மிகச் சிறப்பாக வளர்ந்து. வருகிறது மேலைநாடு களில் இத்துறையடைந்த வளர்ச்சியுடன் ஒப்பிடும்பொழுது நம்நாட்டின் வளர்ச்சி குறைவுதான். மிகச்சமீபக் காலத்தில் ஆய்வாளர்கள் பலர் இத்துறையின் வளர்ச்சிக்கு முயற்சிக்கின் றனர். அவர்களுள் எமது கல்லூரியின் பேராசிரியர் டாக்டர். இரா. பாலசுப்பிரமணியன் அவர்களும் ஒருவர். வருங்காலத் தில் இத்துறையின் வளர்ச்சி தமிழின் வளர்ச்சிக்கு உறுதுணை யாகவும், நம் கலாச்சாரத்தை வெளிப்படுத்துவதாகவும் அமை யும். இந்நிலையில் கூத்துத்தமிழுக்குப் பெருமை சேர்க்கும் வகையில் 'கணியான்கூத்து' என்ற இந்நூல் அமைகிறது.

நாட்டுப்புறக்கலைகளில் கணியான்கூத்திற்கு எத்தகு இடம்? என்பதை இந்நூலின் வாயிலாகத் தெரிந்து கொள்ள லாம். நெல்லை, குமரி மாவட்டங்களில் மட்டுமே இடம்பெறும் இக்கூத்தினைப் பற்றி முறையான களஆய்வு நிகழ்த்தி ஆய்வுச் செய்திகளைத் தொகுத்துள்ளார். கட்டமைப்பில்லாத பேட்டி (Non-controlled), உற்றுநோக்கல் (observation) போன்ற களஆய்வு உத்திகளைப் பயன்படுத்தியுள்ளார்.

இதுபோன்று நாட்டுப்புறமக்களிடம் இடம்பெறும் மரபு வழிக்கலைகளையும், பிறசெய்திகளையும் ஆய்வாளர்கள் ஆய்வு நிகழ்த்த முன்வரவேண்டும். இந்த அறிமுகநூலைத் தந்துள்ள டாக்டர். இரா. பாலசுப்பிரமணியன் அவர்களைப் பாராட்டி இதுபோன்று பல நல்ல நூல்களை வழங்க வேண்டுமென்று கூறி வாழ்த்துகின்றேன்.

**ஞா. பாக்கியராஜ் S.J.**

# நன்றியுரை

'சிறுதெய்வ வழிபாடு' குறித்து ஆய்வு செய்த காலத்தில் இக்கூத்தினைப்பற்றி அறியும் வாய்ப்புக் கிடைத்தது. பின் இதனை அறிமுகப்படுத்தும் நிலையில் ஆய்வுக் கட்டுரைகளை வெளியீடாகவும் கருத்தரங்குகளிலும் இடம்பெறச் செய்தேன். 'கணியான் கூத்து — அறிமுகம்' இக்கட்டுரை தினமலர் நாளிதழில் வெளிவந்தது. 'கணியான் வரலாறு' என்றக் கட்டுரை ஆய்வாளர் பேரவையில் இடம் பெற்றது. 'காளிகதை (அம்மன் பாட்டு) – ஆய்வு மதிப்பீடு தூயசவேரியார் கல்லூரியில்நடைபெறும் வியாழவட்டக் கருத்தரங்கில் படிக்கப்பட்டது. இவைகளை நிரல்படுத்திப் பிற ஆய்வுச் செய்திகளையும் தாங்கி இவ்வறிமுக நூல் உருவாகியுள்ளது.

துணைவேந்தர் **டாக்டர்** இராதா தியாகராஜன் அவர்கள் பல்வேறு பணிகளுக்கிடையில் நூலைப்படித்து நல்லதொரு அணிந்துரை வழங்கியுள்ளார்கள். திறமைக்கும், முயற்சிக்கும் ஆதரவு கொடுக்கும் பண்பாளர். கல்விச் சிந்தனையுடன் நிர்வாகத் திறமையும் கைவரப் பெற்றவர்கள். அவர்களின் அணிந்துரை கிடைத்தமைக்கு என் பணிவான நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

பதிவாளர் பேரா. கோ. சங்கரராசுலு அவர்கள் இந்நூல் உருவாவதற்கு வித்திட்டவர்கள். அவர்கள் இந்நூலுக்கு ஆய்வுரை வழங்கியது பொருத்தமுடையதே. அவர்தம் அன்பிற்கு மிக்க நன்றியுடையேன்.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் இயக்குநரும் எனது பேராசிரியருமான டாக்டர் ச.வே. சுப்பிரமணியன் அவர்கள் இந்நூலுக்கு வாழ்த்துரை தந்துள்ளார்கள். அவர்களுடைய வாழ்த்திற்கு என்றென்றும் கடமைப் பட்டவன் என்ற நிலையில் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

எங்கள் கல்லூரியின் முதல்வர் அருட்தந்தை ஞா. பாக்கிய ராஜ் அடிகளார் ஆய்வுப்பணியின் வளர்ச்சியில் கண்ணும்

கருத்துமாய் இருப்பவர்கள். முதல்வரின் ஆசியும் ஆதரவும் எங்கள் துறைக்கு இருப்பதால்தான். இது போன்ற 'நூல்களை' வெளியிட முடிகிறது. அவர்தம் அன்பிற்கும் வாழ்த்துரைக்கும் நன்றி கூறக் கடமைப்பட்டுள்ளேன்.

தவிர, இந்நூலாக்கத்திற்கு உறுதுணையாய் நின்றவர்கள் பலர். அருட்தந்தை வி.மி.ஞானப்பிரகாசம் அடிகளார் ஆசியும் ஆதரவும் வழங்குபவர்கள். துறைத் தலைவர் டாக்டர். தே. லூர்து, டாக்டர் சி. கனகசபாபதி, பேராசிரியர் சிவசுப்பிர மணியன், பேராசிரியர் ஜான் பீட்டர் ஜோசப், திரு இரவிக் குமார் ஆகியோர்களுக்கும் நன்றியுடையேன்.

இவண்,

**இரா. பாலசுப்பிரமணியன்**

## உள்ளே

# A Monograph on Kaniankuttu

It is quite obvious to note the fact that a good number of literary as well as sociological research scholars especially in TamilNadu have focussed their attention on the study of Folklore. The study of the folkarts is one of the branches in folklore. Although some of the folk-arts like Therukkuttu, Karakattam, Silambattam, Oilattam, Puraviattam and Paraikuttu are quite familier to the people of TamilNadu, Kaniankuttu is not yet known to them. Moreover this art of Kaniankuttu has been willingly neglected by Tamilsociety. Besides this fact Kaniankuttu, has also not been recognised by the cultural institutions. It is not accepted as valuable art both by lay people and men of letters. Therefore it seems to be quite worthwhile to do some research on Kaniankuttu at present. Furthermore, it is quite unavoidable for a real research scholar to take needful steps for the recognition of folk drama.

The present study deals with the performance of Kanian kuttu mainly in a descriptive way. Kaniankuttu is now being enacted as a drama in the southern regions of TamilNadu particularly in Tirunelveli and Kanyakumari districts. The people who are living in other regions are not aware of this kuttu. A study on Kaniankuttu has been taken up for research with purpose of introducing this ancient Tamil kuttu to the entire Tamils.

The hypothesis of the research is framed in the following manner. The status of this Kaniankuttu, the performance of this art, the socio-economic factors of Kanian artists and the place of Kaniankuttu in the Folkarts of the Tamils have to be studied in accordance with the

sequences of one another. In addition to these, a separate story, which is frequently performed in Kaniankuttu, is to be analysed in practical criticism.

It is quite clear that any folklore study is based upon Interview. In this study there is a description of a method of interview in the first chapter. The interview is written in a narrative form without neglecting the field experiences. The dialogue is almost in the colloquial form of expression. It is understandable that some research scholars venture to give conclusion without having any consideration for the field data. They totally reject the socio - economic factors which are connected with the field data. But this research study combines both of them and tries to find out the appropriate inferences and conclusions. The type of interview undertaken here is the Non-formal one. Above all the identical data are selected among field data only.

It is inevitable to become aware of the history of Kanian Caste before studying the art of Kaniankuttu. In ancient times a group of artists known as kanians were just wandering hither and thither moving from one place to another by performing their art. After some time, a few persons among them separated themselves from the group and adopted the profession of astrology for their livelihood. The others remained in the group formed itself as a separate caste. The present artists of the Kaniankuttu state that none of them knows astrology and even their predecessors did not know astrology atall. They also accept the fact that there might have been some astrologers within their society long time back and they probably might have been serving as priests in the temples of the village local deities.

The Kanian artists used to compose stories on Gods related with great tradition in recent times. This shows they have got some aspiration. for social recognition and the recognition of the people who are occupying the upper gradation of the society. This process is called as sancritization which has been invented by M.N. Srinivas, one of the eminent sociological scholars in India. It is a great pity that the expectation of the Kanian artists is not yet fulfilled. The history of Kanian caste is shortly derived from interview data, the myths corresponded with the orgin of the kanian caste and the field observation.

The Kanian artists are not sufficiently paid and they are usally treated as slaves in bond-labour system. They are fully ignorant of the knowledge of other professions. The income that they get from their professional performance during the year, especially on festive occasions connected with village deities, is only sufficient for half of the year. They depend upon loans for the rest of the year.

The place of Kaniankuttu in Tamil folkarts is described in the next chapter with the help of family tree diagram showing the classification of folkarts of the Tamils. Kaniankuttu is a type of kuttu containing a full-fledged story. The performances of Kaniankuttu appeals not only to the eyes but also to the ears. It is generally performed in the open air theatre and therefore this kuttu can be estimated as a folk form of dramatic art.

A Microstudy of the story of Kali, which is a performance frequently enacted by Kanian artists is analysed in a separate Chapter. A synopsis of the story, the study

of the characters, the five stages of the plot and the theme are vividly explained in the light of content analysis. Just as in the plot of ancient Tamil Kuttu there are five stages in the plot of the story of Kali. In the story only divine characters is exposed. While analysing the structural parts of the story of kali we find a mixture of both poetic as well as prose form present in the narration of the kuttu. Moreover. the arts of literature, music and drama linked with one another in this dramatic art.

The comparative approach as a whole is not followed in this research though in some places the method of comparative study has been successfully adopted. The study of reconstruction in comparative approach was taken by Mr Caldwell in the later half of the nineteenth century. He reconstructed the protoforms in the Dravidian languages. After the initiation of the Mr. Caldwell this study of reconstruction has been very carefully developed as a method of approach with the intention of finding out the protoform in the fields of literature, Grammar and folkgames. While reconstructing Kaniankuttu. it has been evolved from the combination of the two types of performances namely Kuravan kurathi attam and the story with kummi, the story with the Kolattam on one hand, and Kathakalatchebam and Villupattu on the other hand - These things are considered to be the protoforms of Kaninankuttu. It can be a valuable suggestion for the research scholars to make above ideas as a working hypothesis and on the basis of this they can come out with proper conclusions.

It is easy to understand the fact that chamiattam and sacrifice Ceremony are performed during the time of

this kuttu. But it is performed exclusively. These ritual functions were believed to have prevailed in ancient times as the original forms of the drama. Inspite of this fact, they have been associated with Kaniankuttu even today. Therefore Kaniankuttu can also be considered as a ritual drama. There is also a possibility of comparing Therukuttu with Kaniankuttu.

Nowadays the performance of the Kaniankuttu takes place under the supervision of village landlords who are also the unathorised trustees of the village deitie, Generally it has been the custom of the Kanian artists to praise the landlords at the end of their performances. Moreover most of the story have abundance of Sanskrit influence with puranic stories and also the mixture of Sanskrit terms.

The primary aim of this study is to make both the literate as well as illiterate people understand the significance and the valuable nature of the traditional folk performance called Kaniankuttu.

---

# திட்டப் பாங்கு

ஆய்வுகள் பலதிறத்தன. இலக்கியத்தை மூலத்தரவு களாகக் கொண்டு ஆய்வினை மேற்கொள்வது ஒருவகை. இவ் வகை ஆய்வுகளுக்கு ஆய்வாளரின் கடின உழைப்பும், முயற்சி யும் கைகோர்த்த நிலையில் நூலகத்தைச் செவ்வனே பயன்படுத் தினால் போதுமானது. களஆய்வுத் தரவுகளை (Field study) மூலத்தரவுகளாகக் கொண்டு ஆய்வினை நடத்துவது ஒருவகை. இவ்வகை ஆய்வாளருக்கு மூலத்தரவுகளை இனங்கண்டு கொள்வது (Identification) முக்கியப் பண்பாகக் கருதப்படு கிறது. நூலகவழித்தரவுகள் இவ்வகை ஆய்விற்கு இரண்டாந் தரத் தரவுகளாகவே (Secondary Sources) அமையும்.

கள ஆய்வு என்பதை ஒரு துறைக்குச் சொந்தமானதாகக் கருத இயலாது. நாட்டுப்புறவியல், சமூகவியல், மானுடவியல் போன்ற பல்துறைகள் இம்முறையைப் பின்பற்றுகின்றன. அவ்வகையில் நாட்டுப்புறவியல் சார்ந்த இவ்வாய்வில் கள ஆய்வு அடித்தளமாக அமைந்துள்ளது.

கள ஆய்வின் வழித் தரவுகளைச் சேகரிப்பதற்குப் பல உத்திகள் உள்ளன. உற்றுநோக்கல் (observation) பேட்டி (Interview), வினாவழித்தொடர்பு (Questionnaire) தனிநிலைஆய்வு (Case study) போன்ற உத்திகளைக் கூறலாம். ஆய்விற்கு அத்தனை உத்திகளும் பயன்படுத்தவேண்டு மென்பது கட்டாயமில்லை. எவ்வகைத் தலைப்பிற்கு எவ்வகை உத்திகள் பயன்படுத்த வேண்டும் என்பதை ஆய்வாளர் கண்டுணர வேண்டும். அதன்வழி இவ்வாய்வில் முதலிரண்டு உத்திகள் கையாளப்பட்டுள்ளன.

நாட்டுப்புறத்தில் கலைகள் (Folk Arts) தனித்ததொரு செல்வாக்கில் இல்லை. சிறு தெய்வ வழிபாட்டுடன் (Village Deities) மேற்குறித்த கலைகள் பின்னிப்பிணைந்துள்ளன. நாட்டுப்புறத்தாரின் சமய நம்பிக்கைக்கும் (Folk Relegion) நாட்டுப்புறகலைகளுக்கும் மிகநெருங்கியத் தொடர்பு உண்டு.

அந்தத் தொடர்பைத் தெளிவாக உணர்ந்து கொண்டால் நாட்டுப்புறச் சமயம். நாட்டுப்புறக் கலைகள் இவ்விரண்டும் ஒரு நாணயத்தின் இரண்டு பக்கங்கள் எனக் கூறலாம்.

உற்றுநோக்கல் உத்தியில் களத்திற்குச் சென்று கட்புலனாகவும் செவிப்புலனாகவும் கருத்துக்களைச் சேகரிப்பது. கணியான் கூத்து நெல்லை மாவட்டத்தில் மட்டும் காணக்கூடியது. எனவே, இப்பகுதியின் கோவில் கொடை நாட்களில் இக்கூத்தைக் காணுதல் இயலும். இந்த முறையில் பாளையங் கோட்டைக்கருகிலுள்ள முந்நீர்ப்பள்ளம் என்ற கிராமத்தில் அய்யனார் கோவில் கொடை நடந்த நாளில் இக்கூத்தும் இடம் பெற்றது. கூத்துக்கலைஞர்கள் இரவுமுழுவதும் விழித்து நடத்தினர். கலைஞரின் கூத்து மரபு. சிறு தெய்வ வழிபாடு இவைகள் சார்ந்த தரவுகள் உற்றுநோக்கி அறியப்பட்டன.

அன்று அறிமுகமான கலைஞர்களை அன்றே சந்தித்துப் பேசுதல் இயலாது. எனவே, அவர்களுடன் ஒருநாள் பேட்டி அமைத்துக் கொள்ளப்பட்டது. பேட்டி என்றவுடன் பெரிய அரசியல் தலைவர்கள், சினிமா நட்சத்திரங்கள் இவர்களைக் கண்டு பேசுவதுதான் பேட்டியென்ற தவறான மதிப்பு இக் காலத்தில் பரவலாக இருக்கின்றது. ஆய்வுநிலையில் அமையும் இப்பேட்டி ஒரு பண்பாட்டில் வேரூன்றி வந்த ஒரு கூத்துக் கலையின் பண்பாட்டு மதிப்பை(Cultural Value) வெளிப்படுத்தி நிற்கிறதென்றால் அதனை வரவேற்பது ஆய்வாளர்களின் கடமை. மலிந்த நிலையில் இருக்கும் பேட்டிக்கு உயிர்த் துடிப்புக் கொடுக்கும் சக்தி ஆய்வாளர்களின் செயலில் இருக் கிறது. அவ்வண்ணமே இந்நூலில் பேட்டி முக்கிய இடம் வகிக்கிறது.

பேட்டியில் முதலிலேயே வினாக்களைத் தயார் செய்து கொண்டு போய்க் கேட்பது ஒருமுறை; இதனைக் கட்டமைப்புப் பேட்டி என்று கூறுவர். இதில் ஆய்வாளர் கேட்கும் வினாக் களுக்கு மட்டுமே பேட்டி கொடுப்பவர் செய்திகள் தர இயலும்

அவ்வாறின்றிச் சாதாரணமாகக் கலந்துரையாடலில் பேட்டியை அமைத்துக் கொள்ளுவதும் ஒரு வகை. இதனைக் கட்டமைப்பில்லாதப் பேட்டி என்பர். இதனைக் கலந்துரையாடல் என்றழைப்பதே தகும். கணியான் கூத்துக் கலைஞர்களுடன் நடத்திய கலந்துரையாடல் நூலின் முதற்பகுதியில் சேர்க்கப் பட்டுள்ளது. இதற்குக் கீழ்க் கண்ட நோக்கங்களைக் கூறலாம். நூலில் நுழைவோருக்கு முதலில் ஒரு தெளிவு கிடைக்கிறது. அதாவது கணியான் கூத்தைப் பற்றிய செய்திகள் பரவலாகத் தெரிந்துகொள்ள இயலும். அடுத்து இவ்வகைக் கலந்துரை யாடல்தரவுகளும் உற்றுநோக்கல் வழித்தரவுகளும் ஆய்விற்குப் பயன்படுத்தப்பட்டுள்ளன. தரவுகள் இவை, ஆய்வுகள் இவை எனப் பகுத்தறிந்து கொள்ளலாம். ஆய்வில் நுழைபவருக்கு ஏற்படும் அனுபவம்; ஏற்கனவே அவரிடத்திலுள்ள அனுபவம் இவைகளைப் பற்றிச் சிந்தித்துப் புதுவகை ஆய்வில் நல்லதொரு கலந்துரையாடலை அமைக்க இயலும். கலந்துரையாடல் வழக்குச் சொல்லிலேயே அமைந்துள்ளது. இயல்பை மாற்றிச் செயற்கையில் முலாம் பூசுவதை விட அப் படியே கொடுத்தல் தேவையானதாகும். இத்தேவை, தமிழின் தூயமரபைத் தகர்க்கிறது என்று கூறுவோர் கூற்று ஏற்றுக் கொள்ளத்தக்கதல்ல. காட்டாக திருநெல்வேலிப் பகுதியில் சிறு தெய்வ வழிபாட்டு விழாவினைக் கொடை என்று சொல்வார்கள். எனவே, வழக்கிலுள்ள அச்சொல்லைப் பயன்படுத்துவதே நல்லது. அன்றியும் எழுதுகின்ற தமிழுக்கும் பேசுகின்ற தமிழுக்கும் வேறுபாடு உண்டு. கலந்துரையாடலில் பேசுகின்ற வழக்குமொழியே தேவை.

கலந்துரையாடலில் தேவையான தரவுகளை விட தேவை யற்ற அல்லது பொய்யான அல்லது மிகையான அல்லது சான் றில்லாதத் தரவுகளும் இருக்கக்கூடும். ஆய்வின் தலைப்புக் கணியான்கூத்து என்றால் இக்கூத்தின் உயிரோட்டம் அத்தனை வினாக்களிலும் பதிலிலும் இழையோடும். உட்பொதிந்து இழை யோடுமாறு கலந்துரையாடல் அமைப்பது ஆய்வாளரின் திற மையைப் பொறுத்ததாகும்.

கணியான் கூத்து — அறிமுகம் என்றக் கட்டுரை விளக்கமுறையில் (Descriptive) சுருக்கமாகத் தரப்பட்டுள்ளது. இக் கணியான் கூத்துக் கலைஞர்கள் யார்? சமுதாயவளர்ச்சியில் (Sociological process) துவக்கத்தில் இவர்களின் நிலை என்னவாக இருந்திருக்கலாம் என்பது மீட்டுருவாக்கம் (Reconstruction) செய்யப்பட்டுத் தற்போது இக்கூத்துக் கலைஞர்களின் நிலையைச் சமுதாயப் பண்பாட்டுக் கண்ணோட்டத்தில் (Socio-cultural method) பார்க்கப்பட்டுள்ளது.

நாட்டுப்புறக் கலைகளில் தெருக்கூத்து, பாவைக்கூத்து, வில்லுப்பாட்டு இவைகளின் பண்பாட்டு மதிப்பு வெளிப்பட்டு நிற்கக் கணியான்கூத்து தெற்கு மூலையின் ஒதுக்குப்புறத்தில் மறைந்துவரும் மரபுக்கலையாக உள்ளது. எனவே, நாட்டுப்புறக்கலைகளில் (Folk performances) கணியான்கூத்திற்கு எந்த இடம்? இதனை வகைமைப்படுத்தும் அணுகுமுறையில் விளக்கப்பட்டுள்ளது. எவ்வகைக் களஆய்வு வழித்தரவிற்கும் வகைமைப்படுத்தல் என்பது அடிப்படை ஆய்வு அணுகுமுறையாகும். இதனைக் கருத்தில் கொண்டால் கணியான்கூத்திற்கு எவ்வகையில் மரபியல் சார்ந்த மதிப்பு (traditional value) இருக்கிறது என்பதை உணரலாம்.

களஆய்வின்போது காளிகதையின் (அம்மன் பாட்டு) மூல பாடம் பதிவுநாடாவில் பதிவுசெய்யப்பட்டது. இந்த மூல பாடம் பின்னிணைப்பில் கொடுக்கப்பட்டுள்ளது. இக்கதைச் சார்ந்த பாடலை ஆய்வு மதிப்பீடு செய்யும் (Micro analysis) போக்கில் அமையும் கட்டுரை ஓரளவு அமைப்பியலை (Structural analysis) விளக்கி அமைந்துள்ளது. கூத்தினைச் சார்ந்த கதைப்பாடல் என்ற வகையில் கதைகூறும் உத்திகள் எவை? என்று கூறப்பட்டுள்ளன. கதையின் கருவை மானுடவியல் கண்ணோட்டத்தில் (Anthropological view) அணுகினால் குறியீட்டுப் (Symbol) பொருளின் உண்மை விளங்கும் என்ற குறிப்புத் தொட்டுக் காட்டப்பட்டுள்ளது.

பொதுவாக ஆய்வு என்பது முடிந்த முடிவு என்று ஒடுக்கி விடமுடியாது. ஆராயப் புகுவோர்க்குப் பலதுறைகளில் பல

புதுவகைக் கண்ணோட்டங்களில் ஆராய்வதற்கு வாய்ப்புண்டு. இத்தன்மை நாட்டுப்புறக் கலைகளுக்கு மிகுதியாக உண்டு.

பின்னிணைப்பாக காளிகதை என்ற அம்மன்பாட்டின் மூல பாடம் கொடுக்கப்பட்டுள்ளது. அய்யனார் என்ற சிறுதெய்வ வழிபாட்டின் கொடைநாளில் இக்கூத்திற்கான இப்பாட்டு இடம்பெற்றது.

தலைமைப்பாடகர் பாடலாகப் பாடிய பகுதியைப் பாடல் வடிவிலும் கதைகூறும் முறையில் விளக்கிக் கூறுகையில் உரை நடையில் கூறியதை உரைநடையிலும் தரப்பட்டுள்ளது.

தலைமைப்பாடகர் பாடி முடிந்ததும் பின்பாட்டுக்காரர் தலை யிட்டால் அவர் பயன்படுத்திய வரிகளுக்குக் கீழே பின்பாட்டு என்று குறிப்பிடப்பட்டுள்ளது. சிலஇடங்களில் தலைமைப் பாடகர் ஓய்வு எடுக்கும்போதோ அல்லது கதை ஆர்வநிலையில் விறுவிறுப்பாக இயங்கும் நிலையில் மகுடமும் பின்பாட்டும் இடம்பெறும். அதனையும் பக்கத்தில் குறிப்பிடும் போக்கு இடம் பெற்றுள்ளது.

கதைப்பாட்டுத் தலைமைப் பாடகரின் திறமையைப் பொறுத்தும் காலத்தைப் பொறுத்தும் கூட்டிக் குறைத்துச் சொல்வதைக் களஆய்வில் உணரமுடிந்தது. எனவே, இங் குத் தரப்பட்டுள்ள மூலபாடம் வரையறுக்கப்பட்ட வடிவம் உள்ளது என்று குறிப்பிட முடியாது. கதைப்பாட்டு கூடவோக் குறையவோ அமையலாம்.

## கணியான் கூத்துக்
## கலைஞர்களுடன் கலந்துரையாடல்*

● கணியன் கூத்துக்கலைஞர்கள் எங்கு மிகுதியாக இருக்காங் கன்னு சொல்ல முடியுங்களா?

நெல்லை மாவட்டத்திலேதான் ரொம்பப் பேர் வாழ்றுங்க... எனக்குத் தெரிஞ்சு வேறு மாவட்டத்திலே யாரும் வசிக்கலீங்க.

---

* இக்கலந்துரையாடலின்போது உடனிருந்தும் தக்க ஆலோசனைகளும் கூறிய பேராசிரியர் சிவசுப்பிரமனியன் அவர்களுக்கு நன்றி உடையேன்!

● நெல்லை மாவட்டத்திலே மட்டும் இருக்கிறதுக்கு ஏதாவது காரணம் கூறமுடியுங்களா?

நெல்லை மாவட்டத்திலே அதனை ஒட்டியிருக்கிற கன்னியா குமரி, நாகர்கோவில் பகுதியிலும் இருக்காங்க. இதுக்கு என்ன காரணமுன்னு தெரியாதுங்க. புராணத்திலேதான் சில செய்திகள் வருதுங்க.

மாலாட மழுவாட மங்கை சிவகாமியாட
மறையாட திரையாட முப்பத்து
முக்கோடி தேவர்களும் ஆட
அம்பாளின் இடதுகால் பெருவிரலில்
பிறந்தவன் கணியான்.

அப்படிப் பிறந்தவன் கைலயங்கிரி மலையிலிருந்து பூலோகத் திற்கு வந்தான் என்று சொல்லுவாங்க.

● அம்பாளின் இடதுகால் பெருவிரலில் பிறந்தவன் கணியான் என்று சொன்னீங்க. அப்படின்னா வலதுகால் பெருவிரலில் யாராவது பிறந்தாருங்களா?

சரியாக் கேட்டிட்டுங்களே. அம்பாளின் வலதுகால் பெரு விரலில் பிறந்தவன் கம்பர்னு சொல்லுவாங்க. அவுங்க காளி கோயில் பூசாரிங்க. நாங்க சிவபெருமானின் அடிமைங்க.

● இந்தப் பக்கம் சிவபெருமானுக்குக் கோவில் கிராமத்திலே இல்லீங்களே?

அதாவதுங்க நாங்க கிராமத்திலே சுடலைங்கிற பெயரிலே அழைப்போமுங்க. சுடலையும் சிவனும் ஒன்னுதாங்களே.

● உங்க கூத்தை மகுடாட்டம் என்று சொல்லுருங்களே ஏன்?

நாங்க கூத்திலே பயன்படுத்துற கருவிங்க. அதை வச்சு மகுடாட்டம்னு சொல்ருங்க.

● அந்த மகுடத்தைப் பற்றிக் கொஞ்சம் சொல்லுங்களேன்.

கணியான் பிறக்கும் போதே மகுடத்துடன் பிறந்தான்னு சொல்லுவாங்க.

● கொஞ்சம் மன்னிக்கனும். மகுடத்தோடப் பிறந்தா 'மகுடக் காரர்னுதானே' சொல்லனும். 'கணியான்' என்று ஏன் சொல்லனும்?

நீங்க விவரமாகக் கேக்கறீங்க. அப்படிக் கேட்கிறதிலே சங்கதி நிறையாத் தெரியுமுங்க. கணீர்னு ஒலி கொடுக்கும் சிலம்பின் பரலிலிருந்து நாங்க பிறந்ததாக முன்னோர்கள் சொல்லுவாங்க... வேறு காரணம் தெரியலேங்களே.

● சாதகம் கணிக்கிற கணியானுக்கும் உங்களுக்கும் ஏதாவது தொடர்பு உண்டுங்களா?

எனக்குத் தெரிஞ்ச வரைக்கும் இல்லீங்க. சாதகம் பாக்கிறது எங்க தொழில் இல்லீங்க. ஒரு வேளை அந்தக் காலத்திலே இருந்தவங்க கொடை நாட்களிலே சாமியாடி குறிசொல்லினதா ஞாபகமுங்க.

● சரிங்க! மகுடத்தைப் பற்றிச் சொல்லுங்க.

என் பக்கத்திலே இருக்கிறவரு மகுடம் வாசிக்கிறவர் தான். அவர்கிட்ட நீங்க உங்களுக்கு வேணுங்கிறதைக் கேட்டுக்கிட்டு இருங்க. நான் வீட்டுல போய் மகுடத்தையே எடுத்துக்கிட்டு வாரேன்.

● நீங்க இப்படி வந்து உக்காருங்க? நீங்க தங்கவேலு குழுவிலே இருக்கறீங்களே, உங்களுக்கும் சொந்த ஊர் ஆரைக் குளம்தானே?

இவரு குழுவிலே இருக்கிறது உண்டுங்க. ஆனா சொந்த ஊரு அடுத்த கிராமமுங்க. ஒரு குழுவிலே தொழில் செய்யற நாங்க அத்தனைபேரும் ஒரே ஊர்னு இருக்க மாட்டோமுங்க. வேறு வேறு கிராமத்திலே இருந்துகிட்டிருப்போம். அவரு தகவல் சொன்னா கொடை நாளிலே ஒன்னாகத் தொழில் செய்வோமுங்க.

● அப்படீங்களா இந்தக்குழுவிலே இருக்கறவங்களைக் கொஞ்சம் கூப்பிட்டு அறிமுகப்படுத்துங்களேன். அதற்கப்புறம் மற்ற விபரத்தைக் கேட்டுக்கறேன்.

இதை வந்தவுடனே செஞ்சிருக்கனுங்க. அந்தத்தப்பு தங்க வேலுடையதானுங்க. அவருதான் இந்தக் குழுவுக்குத் தலைமைப் பாடகருங்க. அவர் கூத்து நடத்துகிற இடத்துக்குச் செல்லுவோம். அட்வான்ஸ், கிட்வான்ஸ் பணம் சம்பந்தப்பட்ட தெல்லாம் அவர்தானுங்க. இந்தோ அவரே வந்துட்டாருங்க.

● வாங்க... தங்கவேலு! உங்க கையிலே வச்சிருக்கிறது மகுடம்னு நினைக்கறேன்.

ஆமாங்க! நாமஎல்லாம் இங்கு கலந்து பேசறதுக்கு முன்னே நீங்க கொஞ்சம் சோடா, பீடி ஏதனுச்சும்......

அதெல்லாம் வேண்டாமுங்க. கடையிலே கலர் வாங்கு வோம். உங்க குழுவினருக்கும் சேர்த்து நாங்கதான் (நானும் என் நண்பர் பேரா. சிவசுப்பிரமணியன் அவர்கள்) வாங்கித் தருவோம். என்ன சொல்றீங்க.

நீங்க எங்க கிராமத்திற்குத் தேடி வந்திருக்கீங்க. நம்பப் பண்பாடு வந்தவங்களை உபசரிக்கிறதுதானுங்களே. படிச்ச வங்க நீங்களே சொல்லுங்க. இந்த விசயத்திலே நீங்க மறுத்தா எங்க மனசும் கஷ்டப்படும்.

(இடைவேளையில் கூத்தைப்பற்றியக் கலந்துரையாடல் அமையவில்லை)

● நீங்க உங்க குழுவினரை அறிமுகப்படுத்துங்க,

இவருதாங்க உதவிப்பாடகர் நடராசன். சொந்த ஊரு மணப்படை வீடுங்க. அடுத்து மகுடக்காரருங்க. இங்கஇரண்டு பேரு வந்திருக்காருங்க. ஒருத்தரு பெயரு ஈசுவரன். இவரு முதல் மகுடக்காரர்னு சொல்லுவோம். இவரு பெயரு முருகேச னுங்க. மேலச்செவல் சொந்த ஊருங்க. இவரை உதவி மகு டம்னு சொல்லுவோம். அடுத்து ஒரு உதவிமகுடம் உண்டுங்க. அவர் பேரு ஆதிமூலம். தருவை கிராமத்தைச் சார்ந்தவருங்க. பொம்பிள்ள வேஷம் போடறவங்க இரண்டு பேரும் இங்க

வரல்ல. அவர்களைச் சேர்த்து எங்கக் குழுவிலே மொத்தம் ஏழு பேருங்க இருக்காங்க.

● அந்த மகுடத்தை இப்படிக் கொடுங்க? இது என்ன தோலாலே போர்த்தியிருக்காங்க?

எருமைமாட்டுக் கன்றுகுட்டியின் தோல் போர்த்தப்பட்ட துங்க.

● மகுடத்தைச் சுற்றியிருக்கிற இந்த மரம் என்னதுங்க?

வேம்பு இல்லாட்டி பூவரசு மரமாக இருக்குமுங்க.

● குறிப்பா எருமை மாட்டுக் கன்றுக் குட்டியின் தோல், வேம்பு, பூவரசு இந்த மரத்தைப் பயன்படுத்துவதிலே ஏதாவது காரணம் இருக்கதுங்களா?

நீங்க நினைக்கிற அளவிற்கு எந்தக் காரணமும் இருப்ப தாத் தெரியலிங்க. அதிலே செஞ்சா நல்லா நாதம் வரும்னு சொல்லுவாங்க.

● மகுடக்காரரை அறிமுகப்படுத்தும் போது முதலாவது மகுடம் இரண்டாவது மகுடம் என்று அறிமுகப்படுத்தினீங் களே! எத்தனை வகை மகுடம் இருக்குங்க?

உச்சக்கட்டம், மந்தக்கட்டம் என்று இரண்டு வகை இருக்குங்க. உச்சக்கட்டத்துலே இரண்டு, மந்தத்திலே ஒன்னு.

● இரண்டு மகுடத்திலே எந்த மகுடம் உயர்ந்தது?

பரவாயில்லே அதுல கூட வேறுபாடு இருக்கிறதை நுணுக்கமாகண்டு பிடிச்சுட்டீங்களே. மந்தக்கட்டக்காரர்க்குத் தான் முதலிடமிங்க.

● உச்சக்கட்டத்திலே இரண்டு இருக்கிறதுங்களே என்னங்க அவசியம்?

கொடை நாளிலே சிலருக்குச் சாமி வந்திடுங்க, அப்பொ ... ஒரு உச்சக்கட்டம் வந்துஅடிச்சா சாமிவராதுங்க. வேகமாக இரண்டு உச்சக்கட்டம் வாசிக்கணும்.

● அப்புறம் பெண்வேஷதாரிகளைப்பற்றி ஏதாச்சும்சொல்லுங் களேன்.

அன்னிக்கு அய்யனார்சாமி கொடைக்கு நீங்கவந்திருந்தப்ப பார்த்திருப்பீங்க. அவங்க நான் பாடறப்ப ஆடாமல் காலை மட்டும் அசைப்பாங்க. பாடி முடித்ததும் வேகமாக காலிலுள்ள சலங்கையிலிருந்து ஒலி வரும்படி ஆடிக்கிட்டு இருப்பாங்க.

● கூத்தோட ஆரம்பம், முடிவு, கதை சொல்றது பற்றிச் சொல்லுங்க.

முதல்லே கணேசன் மேலே அப்புறம் சரஸ்வதி மேலே பாடுவோமுங்க. எந்தக் கோயில் கொடை விழாவிற்குப் போயிருக்கிறோமோ அந்தக் கோவில் தெய்வத்தைப் பற்றிப் பாடுவோமுங்க. அடுத்து குரு வணக்கம். முடிவுங்கிறது நாங்க முடிச்சாத்தாங்க. இல்லாட்டி விடிய விடிய வரைக்கும் பாடுவோம். கொடையை நடத்துற ஊர்ப்பெரிவங்க சொல்லு கிற வரைக்கும் படிப்போம்.

● எந்த சாமி மேலே பாடுவீங்க?

சுடலைமாடன், காளி, இசக்கியம்மாள் இந்த மாதிரி தெய் வங்கள் மேலே பாட்டு வச்சிருக்கோம், ஆனால் எந்தத் தெய் வத்து மேலேயும் எங்களால் பாடமுடியுமுங்க...

● ஒவ்வொரு சாமிமீதும் பாடும்போது மெட்டு ஒன்றுபோல இருக்குங்களா? மாறுபடுமுங்களா?

கதை, வரலாறு இதெல்லாம் ஒரே மெட்டுதானுங்க. ஆடு வதற்குத் தகுந்தபடி சிலநேரங்களில் குரலெடுப்போம். கூட்டம் ரொம்ப அமைதியாக் கேட்டுக்கிட்டு இருந்தா கதைக்கு ரொம்ப இடம் கொடுப்போமுங்க. ஆடும்போது பாடகரை விட மகுடக்காரருக்குத்தாங்க வேலை.

● நீங்கப் பாடிக்கிட்டு இருக்கும்போது இடையே அன்பளிப்பு கொடுத்தா... உங்கக் கதையை நிறுத்திவிட்டு அவரைப் புகழ்ந்து பாடியதை நேற்றிக் கொடையிலே பார்த்தேனே.

புகழுக்கு மயங்காதவங்க யாருங்க. அவுக கொடுத்த ரூபாய்க்கு அவரைப் புகழ்ந்து பாடினுல் அடுத்தடுத்து ரூபாய் கொடுக்க வருவாங்க. அவுங்கல்லாம் ஊர்ப்பெரியவங்களா யிருப்பாங்க.

● கொடைநாளிலேக் கட்டாயம் கணியான்கூத்துதான் நடக்குமா? இல்லெ வேற நிகழ்ச்சிகளும் உண்டா?

இந்தப்பக்கம் கணியான்கூத்து உண்டுங்க. அடுத்து வில்லுப்பாட்டும் உண்டு.

● சுடலைக்கோவில்ல கூத்து நடக்கிறப்போ உங்க கணியான் லே ஒருத்தர் இரத்தம் காட்டனுங்கிறது கட்டாயப்பழக்கம் மாதிரி தெரியுதுங்களே! இதைப்பற்றி நீங்க என்ன அபிப்ராயப் படறீங்க...?

அந்தக்காலத்திலே சிவனுக்கு பிரம்மதோஷம் ஏற்பட்டப்ப கணியான் கைவெட்டி இரத்தம் காட்டினுத நம்பிக்கைங்க. அந்தப்படி சுடலைக்கோவில் கொடையிலே நாங்களும் இரத்தம் காட்டிக்கிட்டு வர்ரோம். நாங்கள்லே ஒருத்தர் தருவோம். அவரு உச்சகாலத்துலே நல்லெண்ணைத் தேச்சு நீராடி கோடி வஸ்திரத்தைக் கட்டிக்கிட்டு வருவார். பின் ஒரு மரவுரலை வச்சு இடதுகையில் கீறி இரத்தத்தை வெளிப்படுத்துவார். சுடலை; தளவாய், பேச்சி, முண்டம் இப்படி இருபத்தோரு இலையில் படையல் இருக்கும். அதில் பழங்களை உரிச்சுப்போட்டிருப் பாங்க. அத்தனைப் பழத்தின் மேலும் இரத்தம் தடவி வரவேண் டும்.

● இந்தக்காலத்திலே இம்மாதிரி நம்பிக்கை இல்லாட்டி இந்தப் பழக்கம் அவசியம்தானு? உங்க மனசிலே பட்டதைச் சொல்லுங்க!

நீங்க கேட்டதனுலே சொல்ரேம். அந்தக் காலத்துலே யிருந்து ஒரு பழக்கம் வந்துடுச்சு. பக்கத்திலிருக்கிற பெரிய வரைப் பாருங்க. இவரு அந்தக்காலத்திலே இரத்தம் கொடுத்த வரு. இடதுகையிலிருந்து இரத்தம் காட்டாட்டி இவர் நாக்

கின் நுனியைக் கீறியும் இரத்தம்கொடுத்திருக்காரு. அவருக்கு வருஷாவருஷம் வெட்டிதனாலே பேசக்கூட முடியலீங்க...

● அப்படியிருந்தும் ஏன் இந்தப் பழக்கத்தை வச்சிருக்கீங்க?

எங்களுக்கும் பொழப்புக் கணியான் கூத்து. இந்தக் கூத்தை நடத்தற கொடைநாளில் குறிப்பா சுடலேபின் கொடைநாளில் இரத்தம் கொடுக்கணும். அப்படி இரத்தம் கொடுக்கிறதை ஊர்க்காரர்களும் விரும்புறாங்க... நாங்க ஊர்க் காரங்களைப் பகைக்கவும் முடியாது. விரும்பலேன்னு சொன்னாப்புலே கேட்டுடப் போறாங்களோ? இல்லாட்டித் தொழில் நடக்காது.

● உங்கக் கணியானினத்தினர் இந்தத் தொழிலில் ஈடுபடறதத்தான் விரும்புகிறார்களா?

அப்படின்னு சொல்லமுடியாதுங்க. முந்திக்கு இப்ப இந்தத்தொழில் மட்டம்தான்.

● திடீர்னு இந்த முடிவை எதை வச்சு சொல்றீங்க?

சினிமா, கச்சேரி இப்படின்னு நடத்த ஆரம்பிச்சுட்டாங்க. பெரியவங்கதான் இந்த மாதிரி கூத்து, வில்லுப்பாட்டு இது மேலே பிரியப்படறாங்க. நாமக் கதைகளிலே ஒன்னு இரண்டு விட்டுட்டுப் பாடினா அவங்க அந்தக் கதையைப் பாடச் சொல்லிக் கேட்கறாங்க. ஆனால் வருகிற சமுதாயம் இந்த மாதிரி விரும்பலீங்க.

● உங்கக் குழந்தைகளைத் தொழிலுக்குப் பழக்குகின்றீர்களா? இல்லேன்னா படிக்க வைக்கின்றீர்களா?

தொழில் நசிஞ்சுவரதுனாலேப் படிக்கப் போடறோம். போதிய வருமானம் இல்லாததாலே மேலே படிக்கவைக்க முடியலீங்க. ஆனால் குடும்பத்துலே ஒருத்தனையாவது குலத் தொழிலைக் கற்க அனுமதிச்சாதானுங்க இந்தத் தொழில் நிலைக்கும். இந்தப் புராதனக்கலையைப் பற்றி எங்களுக்குத் தெரிஞ்சதனாலே அதை உசிரா நினைக்கிறோம்.

● பிள்ளைங்க தொழிலைக் கத்துக்கிட்டா எப்ப அவன்தனியாத் தொழில் நடத்தும் தகுதியடைவான்?

தொழில் நடத்தும் போது கூடவருவானுங்க. நாங்க இடையே விட்டா பாடுவான். மறுபடியும் நாங்க பாட ஆரம்பிப்போம். அப்புறம் அவன் உதவிப்பாடகராகக் கொஞ்ச நாளைக்கு இருந்துட்டாத் தனியாத் தொழில் நடத்திடுவான்.

● கேட்கறேன்னு தப்பா நினைச்சுடக்கூடாது. அதாவது கேள்விப்பட்டதை வச்சுக் கேக்கறேன். தொழில் நடத்தறவங்க முப்பது வயதிற்கு மேல்தான் திருமணம் செய்து கொள்றது எதுக்காகங்க?

நீங்க இதைப்பத்தியெல்லாம் அறிஞ்சிருக்கீங்க. அதை மனசுல வச்சுக்கிட்டுக் கேக்கறீங்க. இதுல ஒன்னும் ஒளிவு மறைவு இல்லைங்க. குரல் எடுத்துப் பாடனும்னா சக்தி வேணும். இல்லற வாழ்க்கையில் ஈடுபட்டால் சக்தி வீணாகி விடும்கிற கருத்துதான் உண்டுங்க. ஆனா... நம்ப பையன்களைக் கட்டுப்படுத்த முடியாதுங்க.

● நீங்க சக்தி, உடல்நலம் இவைகளைப் பற்றி பேசினதலே கேக்கறேன். நேத்து நீங்க கூத்து நடத்தும்போது இதை கேக்கறவங்க இருபது பேர்க்குள் தான் இருப்பாங்க. ஆனா நீங்க ரொம்பச் சத்தம் போட்டுப் பாடறது தேவைதானா?

அவுக கேக்கருங்களோ இல்லெ கேக்கலையோ, நாங்க அந்தக் குரலில் உயர்த்திப் பாடாட்டி அடுத்த கொடைக்குக் கூப்பிடமாட்டாங்க. இதனாலே உடம்பு பாதிக்கிறது எங்களுக்கும் தெரியுங்க.

● உடம்பு எந்த வகையிலேப் பாதிக்குதுங்க?

கொடை நாட்களில் தான் வருமானம் மற்ற நாட்களில் வரும்படியில்லாததினாலே பசியும் பட்டினியுமாக இருக்கரோம். திடீர்னு மகுடம் வாசிக்கும் போது நாலரைக் கட்டைச் சுதிக்குத் தக எக்கி எக்கிப் பாடருதாலே இரத்த வாந்தி வருகுதுங்க. ஆஸ்துமாவின் பாதிப்பும் ஏற்படுதுங்க.

● இதைத் தவிரத் தொழிலில் உங்களுக்கு வேறுஎன்னென்ன பிரச்சனைகள் ஏற்படுதுன்னு சொல்ல முடியுமுங்களா?

எங்க வாழ்க்கை கொத்தடிமை மாதிரிங்க. வருஷத்துலே கொடை நடக்கும் மாதத்திலேதான் வரும்படி. அதுவும் வெள்ளி, செவ்வாய் நாட்கள் தான் தொழில் நடக்கும். எங்க கிராமத்திலே கொடை நடக்கிறப்போ அடுத்த கிராமத்திற்குப் போயிட முடியாது. அப்படி பணத்துக்கு ஆசைப்பட்டுப் போனு கிராமத்துக்காரங்க எங்களைத் தள்ளி வச்சிடுவாங்க. வருமானம் ரூபாய் இருநூறிலிருந்து முந்நூறு வரைக்கும் வந்தா அதை ஏழுபேர் பங்கு போடனும். நாங்க இதை வச்சு வருஷக்கணக்கா சாப்பிட முடியுமுங்களா! இப்பதைக்கு இப்ப எங்கக் குழுவிற்குள்ள போட்டி வேறு......

● நீங்கத் தொழில் நடத்துறமாதிரி உங்க மனைவி இதில் கலந்துக்க கூடாதுங்களா?

நாங்கத் தொழில் நடத்தும்போது எங்க இனத்துப் பெண் கள் பார்க்க வரமாட்டாங்க. இது எங்க குலக்கட்டுப்பாடுங்க.

● அவுங்க ஏதாவது தொழில் செய்வாங்களா?

பனைவேலை, பாய்முடைதல், கூடை பின்னுதல் போன்ற சிறுதொழில்களை அவுங்க செய்ருங்க.

● உங்க இனத்துலே திருமண முறை பற்றிக் கொஞ்சம் சொல்லுவீங்களா?

மொத்தமா எங்க சமூகத்திலே 350-க்கு மேல் 500 பேர்க் குள்தான் இருப்போமுங்க. ஒரு ஊரில் ஒரு குடும்பம் அல்லது இரு குடும்பங்கள் இருக்கும். அதனுலே எங்கத் திருமணங் கல்லே அவவளவு செலவு இல்லீங்க. நாங்க வரதட்சணை வாங் கிறதும் கிடையாது. கொடுப்பதும் கிடையாது. எல்லாருடைய பொதுவரும்படி நிலைக் குறைவுதானுங்களே.

● உங்க மரபுத்தொழிலை எப்படி முன்னேற்றலாம்னு நினைக்கறீங்க?

இருக்கற தொழிலே நடத்த முடியாதப்போ அதை எப்படிங்க முன்னேத்தறது

● காலத்துக்கு தகுந்த மாதிரி நீங்களும் தொழிலில் கொஞ்சம் புதுமைப் புகுத்திப் பார்த்தால் என்னன்னுதான் கேட்டேன்.

புதுமையை எப்படிங்க புகுத்தமுடியும். நாங்க மரபா எங்கப் பெரியவங்க கத்துக் கொடுத்ததை நடத்தரோம்.

● அது இல்லீங்க. இந்தக் கூத்து கொடை நாள் தவிர வேறு நிகழ்ச்சிகளில் நடத்துவீங்களா!

சில சந்தர்ப்பங்களில் கல்யாண வீடுகளில் அல்லது சடங்கு வீடுகளில் நடத்துவோம். அதுவும் ரொம்ப குறச்சல்தாங்க,

● கல்யாணவீடு. சடங்குவீடுகளில் என்ன கதை பாடுவீங்க?

மீனாட்சி கல்யாணம் கதைதான் விரும்பிக் கேட்பாங்க.

● இந்தத்தொழிலே வேறு நிகழ்ச்சிகளில் நடத்த சந்தர்ப்பம் கிடச்சா நடத்துவீங்களா?

இதிலே என்னங்க சந்தேகம். அதெல்லாம் நடத்துவோமுங்க.

● ஊர்ல நடக்கிறப் பொது நிகழ்ச்சிகளில் இலக்கிய மேடைகளில் கதை நடத்தினால் என்ன?

அந்த மாதிரி நடத்தணும்னா எங்க கதையிலே நீங்க சொல்ற இலக்கியத்தைச் சேர்க்கணும்.

● சர்க்காரிடமிருந்து ஏதாவது எதிர்பார்க்கறீங்களா?

மற்றக் கிராமியக்கலைஞர்களுக்குக் கிடைக்கிற உதவிகூட எங்களுக்கு இல்லீங்களே. எங்களைப்பற்றி, எங்கக் கூத்தைப் பற்றி அரசாங்கம் கவனத்திற்குக் கொண்டு வந்ததாக இல்லீங்க?

● அப்படி சர்க்கார் உதவி செய்வதாயிருந்தால் என்ன வகை உதவியை எதிர்பார்க்கிறீர்கள்.

எங்களுக்குத் தொழில் இல்லாத நாட்களில் உதவி செய்தால் மறுபடியும் தொழில் நடக்கிற காலங்களில் கடனை அடைச்சிடுவோம்.

● அரசாங்கத்திடமிருந்து நேரடியாகப் பணத்தை எதிர்பார்ப்பது தப்பு இல்லிங்களா. அரசாங்கம் முதியோர்களுக்குச் சலுகை வழங்குகிறது. அதை நீங்க பயன்படுத்தலாம் குழந்தைகள் படிப்பிற்கு உதவுகிறது அதையும் நீங்கப் பயன்படுத்தலாம்.

உங்க பேச்சியிலிருந்து நாங்கதான் பயன்படுத்தாம இருக்கிற மாதிரி சொல்றீங்களா?

● அப்படி இல்லிங்க. அந்தச் சலுகையெல்லாம் உங்களுக்கும் உண்டுதானுங்களேன்னு சொன்னேன். தொழில் செய்யறதுக்கு, வேலை வாய்ப்பிற்கு அரசாங்கம் உதவ வேண்டும் இதைத்தானே நீங்க நினைக்கறீங்க.

ஆமாங்க எங்கள்லே கஷ்டப் பட்டுப் படிக்க வைக்கரோம். அரசாங்கம் எங்க இனத்தைத் தாழ்த்தப்பட்ட பிரிவில் சேக்கலீங்க? அதுக்கு ஏதேதோக் காரணம் கேட்டுச் சேக்காமல் இருக்குதுங்க. இதை அரசாங்கம் எங்களுக்குச் செய்யணும்னு எதிர்பார்கறது நியாயம் தாங்களே.

● அரசாங்கம் மரபுவழியிலே வரும் கிராமியக் கலைஞர்களுக்கு ஊக்கம் கொடுக்கிறது. அதைவச்சு உங்க புராதனக் கலையை மேலும் நல்ல முறையிலே நடத்துங்க.

தெருக்கூத்து, கரகாட்டம், சிலம்பு, வில்லுப்பாட்டு இது மாதிரி எங்கக் கூத்துப் பிரபலம் அடையலீங்க. அப்படியிருந்து அரசாங்கம் உதவிசெய்தா நல்லா இருக்குங்க. உங்களை மாதிரி ஆராச்சிக்காரங்க பேசறதோட நிக்காம எங்களுக்கு ஆதரவா எடுத்துச் சொல்லணும்ங்க.

# கணியான்கூத்து — அறிமுகம்

நாட்டுப்புறவியல் தொடர்பான ஆய்வில் நாட்டுப்புறக் கலைகளுக்குக் குறிப்பிடத் தகுந்த இடமுண்டு. தெருக்கூத்து, பாவைக்கூத்து—போன்றவைத் தமிழரின் மரபுப் பண்பாட்டுக் கலையென்ற நிலையில் ஏற்றுக் கொள்ளப்பட்டதுடன் அவை களைப் பற்றிய ஆய்வும் இடம்பெற்று வளர்ந்துள்ளன. இந்நிலை யில் கணியான்கூத்து தமிழகத்தின் தெற்குமூலையில் மட்டும் இடம்பெற்றிருக்கும் ஒரு கூத்துக் கலையாக உள்ளது. இதனைத் தமிழ் மக்களும், ஆய்வாளர்களும் இனம் கண்டு பாதுகாக்கப் படவேண்டுமென்றநிலையில் இவ்வறிமுகப் படலம் அமைகிறது.

கணியான்கூத்து — கணியான் ஆட்டம், மகுடஆட்டம் என்ற பெயரிலும் அழைக்கப்படுவதுண்டு.

சிறுதெய்வ வழிபாட்டுடன் தொடர்புடைய கொடை விழாக்களில் இக்கூத்து இடம்பெறுகிறது. சுடலைமாடன் பாட்டு முதன்மைநிலையிலும், அம்மன்பாட்டு பரவல்நிலையிலும் கூத் தில் இடம்பெறுகிறது. சிறுபான்மை கல்யாண வீடுகளிலும் சடங்குவீடுகளிலும் இக்கூத்து இடம்பெறுவதுண்டு. அதன் போது 'மீனாட்சி கல்யாணம்' போன்ற நிலையில் கூத்திற்கான கதை அமைகிறது,

கூத்தில் மொத்தம் எழுவர் பங்கேற்கின்றனர். தலைமைப் பாடகர் (1) உதவிப் பாடகர் (1) மகுடக்காரர் (3) பெண் வேட தாரிகள் (2) என நான்கு வகையினரைக் காணலாம்.

கூத்தில் மகுடம், சலங்கை போன்றவை இசைக் கருவிகள்' மகுடம் என்ற இசைக்கருவி வகிக்கும் பெரும் பங்கினைக் கொண்டுதான் மகுடாட்டம் என்ற பெயரும் வழங்கப்படுகிறது. பூவரசு, வேப்பமரம் ஆகியவற்றின் கட்டைகளைப் பயன்படுத்தி மகுடம் செய்வர். இவ்வகை மரங்களின் கட்டைகளைப் பயன் படுத்திக் கட்டினுல் நல்ல நாதம் கிடைக்கும் என்பது அவர் களிடம் பரம்பரைச் செய்தியாக இருக்கிறதே தவிர வேறு காரணம் வெளிப்படையாகத் தெரியவில்லை. மகுடத்தில்

எருமைமாட்டுக் கன்றுகுட்டியின் தோல் போர்த்தப்படுகிறது. குறிப்பாக எருமைமாட்டுக் கன்றின் தோல் மட்டும் ஏன் பயன் படுத்தப்படுகிறது என்பது சிந்தனைக்குரியது. கணியான் கூத்தில் காளிகதையில் (அம்மன் பாட்டில்) காளி மகிஷா சுரனைக் கொன்ற செய்தி இடம் பெறுகிறது. மகிஷம் என்பது எருமையைக் குறிக்கும் சொல்லாகும். மகிஷம் என்ற சொல் மகிடம், மகுடம் என வந்திருக்கலாம். மேலும் ஆய்விற்குரியது தான்.

மகுடத்தில் இரண்டு வகை உண்டு. மந்தக்கட்டம், உச்சக் கட்டம் என்பன. தலைமைப் பாடகருக்கு வலதுபுறம் உச்சக் கட்டம் மகுடத்தை வைத்திருப்பவரும் இடதுபுறம் மந்தக்கட் டம் வைத்திருப்பவரும் இருப்பர். இரண்டு வகை மகுடத்தில் மந்தக்கட்டம் வாசிப்பவர்க்கு முதன்மை அங்கம் கொடுக்கப் படும். உச்சக்கட்டம் மகுடம் எண்ணிக்கையில் இரண்டாக இருக்கும்.

கொடைவிழாவில் கணியான்கூத்தின் நிகழ்வின்போது யாருக்காவது சாமிவந்து ஆடினால் ஒரு உச்சக்கட்டம் வைத்துக் கொண்டு அடித்தால் சிறப்பாக அமையாது என்ற காரணத்தி னால் இரண்டு உச்சக்கட்டங்கள் இடம்பெறுகின்றன. அதே மாதிரி உச்சக்கட்டம் வாசிப்பவர்களும் இரண்டுபேர் இருப்பார் கள்.

பெண்வேடதாரிகள் காலில் சலங்கையினை அணிந்திருப்பர்.

தலைமைப்பாடகர் குரலெடுத்துப் பாடுவர். பின் பின்பாட்டு காரர் அல்லது உதவிப்பாடகர் தேவையுள்ள இடங்களில் முன் னவர் பாடியதைத் திரும்பப்பாடுவார். இப்போது மகுடமும் தகுந்தநிலையில் ஒலிக்கும். தலைமைப்பாடகர் டாடும்போது பெண்வேடதாரிகள் தங்கள் ஆட்டத்திற்கு விறுவிறுப்புக் கொடுப்பதில்லை. பாடிமுடித்ததும் தம் கால்களிலுள்ள சலங்கை கள் மிகுந்து ஒலிக்குமாறு ஆடுவர்.

தலைமைப்பாடகர்; உதவிப்பாடகர், மகுடக்காரர்கள் இவர் கள் ஒரு அரைவட்டமாகவும், பெண்வேடதாரிகள் இயங்கும்

விதம் அடுத்த அரைவட்டமுமாக அமைந்து ஒருவட்டஅமைப்பு நிலையில் கூத்து நடைபெறும்.

கணியான் சாதியினரைச் சார்ந்த ஒருவர் கொடைவிழா வில் இருபத்தியோரு பந்திகளுக்கு இரத்தம் காட்டவேண்டும் என்ற பழக்கம் உள்ளது. கணியான்கூத்து நிகழ்விற்கும் மேற் குறித்த செய்திக்கும் நேரடித்தொடர்பு இல்லையென்றாலும் மறைமுகத் தொடர்பு உண்டு என்பதை உய்த்துணரலாம். சிறு தெய்வ வழிபாட்டுத் தொடர்பான ஆராய்ச்சியில் இணைத்துப் பார்த்தால் தெளிவு கிடைக்க வாய்ப்புண்டு.

## கணியான் வரலாறு*

### சொல்விளக்கம்:

கணீரென்று ஒலி கொடுக்கும் சிலம்பின் பரலிலிருந்து பிறந்த பாலகன் கணியான் என்றழைக்கப்பட்டான் என்பது பழமரபுக்கதை. கணித்துச் சொல்லும் சாதகர் கணியான் என் றழைக்கப்படுவதைச் சில கிராமங்களில் இன்றளவும் காண லாம். அப்படி கணித்துச் சொல்லுகின்ற கணியான் சாதியின ருக்கும் இக்கூத்தினை நடத்துகின்ற கணியான் சாதியினருக்கும் இப்போது எவ்விதமான தொடர்பும் இல்லை என்பர்.

இருப்பினும் கணியான் சாதியினர் முற்காலத்தில் சாதகம் பார்த்திருக்கலாம் என்றக் கருத்தும் நிலவுகிறது.

எனவே தொடக்க காலத்தில் கணியான் என்ற கூட்டத் தினர் ஒரு கலைஞர் கூட்டமாக இருந்திருக்கின்றனர். இவர் களினின்று சாதகத்தைத் தொழிலாகக் கொண்டவர்கள் இடையே ஒரு காலத்தில் தனியாகப் பிரிந்திருக்கலாம். அவர் கள் கணியான் என்றும் வள்ளுவன் என்றும் குறிப்பிடப்பட் டிருக்கலாம்.

---

*கல்லூரிக் கல்வித் துணை இயக்குநர் பேராசிரியர் கோ. சங்கரராசுலு அவர்கள் தலைமையில் ஆய்வாளர் பேரவை யில் இடம் பெற்றக் கருத்தரங்கக் கட்டுரை.
இடம்: சித்த மருத்துவக் கல்லூரி, பாளை–627 002.

அந்தக் கணியான் என்ற கலைஞர் கூட்டம் தொடக்கத்தில் இசையையும், கூத்தையும் தொழிலாகக் கொண்டிருக்க வேண்டும். கணியான் என்று குறிப்பிடும் சாதிப் பெயர்வழக்கு இடையே ஒரு காலத்தில் ஏற்பட்டிருக்கலாம்.

இப்போது கணியான் கூத்தைத் தொழிலாகக் கொண்டவர்களே கணியான் சாதி என்று குறிப்பிடுவது பெருவழக்காய் உள்ளது.

## பழமரபுக்கதை:

கணியான் தோற்றம் பற்றி இரண்டு விதமான புராணக் கதைகள் நிலவுகின்றன.

1) சிவபெருமானுடன் தொடர்புடைய கதை
2) சிவபெருமானுடனும் தட்சனுடனும் தொடர்புடைய கதை

## சிவபெருமானுடன் தொடர்புடைய கதை

சிவபெருமானுக்கும் ஐந்து தலை. பிரம்மதேவனுக்கும் ஐந்து தலை. இதனால் வித்தியாசம் தெரியாமல் பார்வதிதேவி பிரம்மதேவனுக்குப் பணிவிடை செய்து கொண்டிருந்தாள். இதனைப் பார்த்த சிவபெருமானுக்குக் கோபம் வந்து விடவே அவர் பிரம்மதேவனின் தலைகளில் ஒன்றினைக் கிள்ளிவிட்டார். அதனால் சிவனுக்கு ஏற்பட்ட பிரம்மஹத்திதோஷம் நீங்குவதற்கு விஷ்ணுதான் யோசனை கூறினர். மகுடத்தைத் தட்டி ஒலிஎழுப்பி இரத்தம் காட்டினால் தோஷம் நீங்கிவிடும் என்று கூறினர். பாதிக்கப்பட்ட சிவபெருமான் சுடுகாட்டுச் சாம்பலைப் பூசிக் கொண்டு தோஷம் நீங்காத குறையில் தில்லையில் ஆடிக் கொண்டிருந்தார். அந்நிலையில் பார்வதிதேவியின் காலிலுள்ள சிலம்பு தெறித்தது. தெறித்த சிலம்பின் பரலிலிருந்து ஒரு பாலகன் தோன்றினன். அவன்தான் கணியான். அப்பாலகன் பார்வதி தேவியின் இடது கால் சிலம்பிலிருந்து தோன்றினன். அவன் சுடலையின் அடிமை. வலதுகால் சிலம்பிலிருந்து

தெறித்த பரல்களிலிருந்து மற்றொரு பாலகன் தோன்றினான். இப்படித் தோன்றிய கணியான் மகுடமிசைத்துத் தன் கையை வெட்டி, சிவபெருமானின் தோஷத்தை நீக்கினான். சிவனே கைலயங்கிரி மலையிலிருந்து பூலோகத்திற்கு வந்து கணியான் சாதியினைத் தோற்றுவித்தான்.

## சிவபெருமானுடனும் தட்சனுடனும் தொடர்புடைய கதை

தட்சன் உலகு முழுவதையும் அரசாளுவதற்காக ஒரு யாகம் செய்தான். அந்த யாகத்தில் கிடைத்த அவிர் பாகத்தைச் சிவபெருமானுக்குக் கொடுக்கக்கூடாது என்று சொன்னான். அதனால் கோபமடைந்த சிவபெருமான் தட்சனை யும், அவன் கூட்டத்தினரையும் எரித்து அழித்தார். தட்சன் தான் செய்த தவறை நினைந்து வருந்தி சிவபெருமானைப் பணிந்தான். 'என்னை மன்னித்தருளும் இறைவா! தவம் செய்ய எனக்கு அனுமதி வேண்டும்' |என்று கேட்டான். சிவபெரு மானோ ''நீ சுடலைமாடனையும் பிரம்மராக்குச் சக்தியையும் பிர பலமாம் கூட்டத்தையும் உரமுடனே பிறவி செய்தால் அனுமதி தருவேன்'' என்றார்.

சுடலைமாடனைப் பிறவிச்செய்யத் தட்சன் தலைமையில் யாகம்நடந்தது. யாகத்தீயிலிருந்து பிரம்மராக்குப் பிறந்தான், பின்னர் மாடன் பிறந்தான். பிறந்தவன் யாககுண்டத்தி லிருந்து வெளியே வரவில்லை. ''எனக்குப் பெரிய பூசை போட் டாலே நான் வருவேன்'' என்றான். சுடலைமாடனுக்கு விழா எடுப்பதாக எல்லோரும் சொன்னார்கள். மாடன்பூசை செய்ய வேண்டிய முறையைச் சொன்னான்.

மகுடச்சத்தம் கேட்டால் ஒழிய
மாடன் பூசை கொள்வானோ
நாக்கு வெட்டினைக் கண்டால் ஒழிய
நானோ பூசை கொள்வேனோ
பேய்க்கு முகத்தைக் கண்டால் ஒழியப்

பெருகப் பூசை கொள்வனே
பெரிய கணியான் வந்தால் ஒழியப்
பூசை கொள்ளுமோ மாடனும்

அதனால் ''கணியானை உற்பத்தி பண்ணுங்கள். அதன் பிறகு என்னிடம் வாருங்கள்'' என்றான். தட்சன், அவனது பரிவாரங்கள், தேவர்கள் ஆகியோர் சிவபெருமானிடம் சென்றனர். ''கணியானை எப்படிப் பிறப்பிப்பது? சொல்லியருளுங்கள்'' என வேண்டினார்கள். அதற்குச் சிவபெருமான் 'தெய்வப்பெண்கள் ஏழுபேரும் இந்திராணியின் தலைமையில் என் முன்னே வந்து ஆடட்டும்; பின்னர் நடப்பதைப் பாருங்கள்'' என்றார்.

தெய்வப் பெண்கள் சிவபெருமானின் முன்னே வந்து நர்த்தனம் ஆடினார்கள். இந்திராணி ஆடியபோது அவள் கால் சிலம்பு தெறித்தது. ஒரு மாணிக்கப்பரல் சிவபெருமானின் முன்னே விழுந்தது. அதிலிருந்து தெய்வக்கணியான் உடனே பிறந்தான். சிவபெருமான் கணியானிடம் ''சுடலைமாடசாமி விழாக் கொள்ளுமாறு ஆடவேண்டும்'' என்று பணித்தார். கணியான், ''சுவாமி நான் எப்படி ஆடவேண்டும் சொல்லுங்கள்'' எனக் கேட்டான், அதற்குச் சிவபெருமான் ''ஆட்டுக்குட்டியின் குருதியை உடம்பில் பூசிக்கொள், அதன் குருதியைக் குழைத்துப் பொட்டாக வைத்துக் கொள். முட்டெலும்பும், மூளையும், மிளகும் போட்டுக் கிண்டிப் படைப்புப் போடு'' என்றான்.

(அ. கா. பெருமான் — ''கணியான் ஆட்டம், யாத்ரா, 34, 35, 36, 1982)

## பழமரபுக்கதை விளக்கம்

பழமரபுக் கதையினை இருநிலையில் பகுத்து நோக்கலாம்.

1) கணியான் தோற்றத்தில் பெருநெறி — சிறுநெறி இணைப்பு.

2) கலைஞர் கூட்டமாக வாழ்ந்த ஒரு வகை இனத்தினர் சமுதாய அங்கீகாரம் பெறுவதைக் கணியான் தோற்றம் காட்டுதல்.

மேற்கூறிய இருகருத்துகளை முற்கோளாகக் கொள்ளலாம் ஒன்றின்படி பெருநெறி — சிறுநெறி இணைப்பு எவ்வாறு வெளிப்படுத்துகிறது என்பதைக் காணலாம்.

பழமரபுக்கதை ஒன்றின்படி சிவபெருமானின் இன்னொரு பெயர் சுடலைமாடன் என்ற குறிப்புச் சுட்டப்படுகிறது. சிவ பெருமானின் பிரம்மஹத்திதோஷம் நீங்குவதற்காகக் கணியான் தோற்றம் கூறப்படுகிறது. இந்தக் கணியான் தோற்றத்தில் சிறுநெறி முறையினர் பின்பற்றும் வழிபாட்டு முறைகள் கூறப்படுகின்றன. மகுட இசை, பலிகாட்டுதல் போன்றவைகளைக் கூறலாம். பழமரபுக்கதை இரண்டின்படி தட்சன் நடத்தும் யாகத்தில் சிவபெருமானின் ஆணையால் சுடலைமாடன் பிறக்கிறான். இந்தச் சுடலைமாடனின் வழி பாட்டிற்காகக் கணியான் தோற்றுவிக்கப்படுகிறான்.

இக்கணியான் தோற்றத்தோடு மகுடஇசை, ஆட்ட மாடுதல், சுடலை மாடனின் பிறப்புக் பற்றியக் கதையினைக் கூறுதல், பலிகாட்டுதல் போன்றவை வற்புறுத்தப்படுகின்றன.

சுடலைமாடன் என்ற சிறு தெய்வ வழிபாட்டில் இசை, ஆட்டம், கதை பலி, இவை இடம் பெறும். அதாவது சிறு நெறியினர் மேற் சுட்டிய முறைகளைப் பின்பற்றுவர். இதனைச் சிவன், பார்வதி, பிரம்மன் விஷ்ணு போன்ற பெருந்தெய்வ வழிபாட்டுத் தெய்வங்களோடு தொடர்புப்படுத்திக் கூறினால், பெருநெறிக்காரர்களின் அங்கீகாரம் கிடைக்கும். இந்த அங்கீ காரத்தினை இணைப்புப் பா்லம் என்றும் குறிப்பிடலாம். இந்த இணைப்புப் பாலம்தான் கணியான் தோற்றம் பற்றிய கதை,

இதைக் கீழ்க்கண்ட வரைபடம் காட்டுகிறது.




× என்ற குறி முரண்பாட்டினைக் குறிக்கும்.
— என்ற குறி இணைப்பைக் குறிக்கும்.

முற்கோளின் இரண்டாவது கருத்துக் கலைஞர்கள் கூட்டமாக வாழ்ந்த ஒரு வகை இனத்தினர் சமுதாய அங்கீகாரம் பெறும்நிலை. தொடக்க காலத்தில் அஃதாவது சற்று நாகரீகம் அடைந்த நிலையில் மக்கள் குழுவாழ்க்கையில் ஈடுபட்டிருந்தனர் என்பதை அனைவரும் அறிவர்.

அக்குழுவாழ்க்கை நிலையில் கலைஞர் கூட்டமொன்று இருந்தது. சமுதாயத்தின் தாழ்வறையில் வைக்கப்பட்டிருந்த அக்கலைஞர் கூட்டம் சமுதாயத்தில் உயர் மட்டத்திலிருந்தவர்களிடம் அங்கீகாரம் பெறும் முயற்சி நிலையில் கணியான் தோற்றம் பற்றிய பழமரபுக் கதை அமைந்திருக்கிறது. சுருங்கக் கூறினல் முதற் கருத்தின் குறிப்பே இங்கும் எடுபடும். அதன்படி சிறுநெறியினர் பெருநெறியினருடன் அங்கீகரிப்பு

நிலையில் உயர்த்திக் கொள்வதால் இதனை மேல்படி நிலைஆக்கம் (Sanscritization) என்று கூறலாம். சமுதாய வளர்ச்சி நிலையில் (Sociological process) மேற்குறிப்பிட்ட ஆக்கம் இடம்பெறுவது இயற்கை.

பெருநெறி

மேல்படி நிலை ஆக்கம்

← கலைஞர் ← குழு

சிறு கூட்டம்

நெறியினர்

## தற்போதைய நிலை:

இக்கணியான் சாதியினர் தற்போது திருநெல்வேலி மாவட்டத்தில் மட்டுமே காணப்படுகின்றனர். இவர்கள் தற்போது சாதகம் பார்ப்பது இல்லை. கூத்தினை நடத்துவதுதான் இவர்கள் தொழில். திருநெல்வேலி மாவட்டத்தில் அம்பாசமுத்திரம், தென்காசி, நாங்குநேரி, ஸ்ரீவைகுண்டம் போன்ற இடங்களில் இருக்கின்றனர். மேலே குறிப்பிட்ட ஊர்களில் எல்லாம் கிராமத்திற்கு ஒரு கணியான் குடும்பம் இருக்கும். இவர்களின் நிலை ஒரு கொத்தடிமை நிலையில் இருக்கிறது. இவர்கள் பெருங்கோயிலுக்குள் நுழைய அனுமதி இல்லை. கிராமத்தில் இவர்கள் தீண்டத்தகாதவர்களாகவே ஒதுக்கப்படுகிறார்கள். பொதுக் கிணற்றில் தண்ணீர் எடுப்பதற்குக் கூட உரிமை கிடையாது. உயர் சாதிக்காரர்களுக்கு முன் இவர்கள் தங்கள் அங்கவஸ்திரத்தை இடுப்பில் கட்டிக் கொள்ள வேண்டும். கிராமத்தில் மேல் சாதிக்காரர்கள் சேர்ந்து நிகழ்த்துகின்ற கொடைவிழாவில் இவர்களின் கூத்து இடம் பெற்றாக வேண்டும். அப்போது கூத்து நடத்துவதற்கெனக் குறிப்பிட்ட தொகை பேசமுடியாது. அவர்கள் என்ன தருகிறார்களோ

அதனைத்தான் இவர்கள் வாங்க வேண்டும். உள்ளூரில் கொடையிருக்கும்போது வெளியூருக்கு இவர்கள் தொழில் நடத்தச் செல்லக்கூடாது. பொதுப்பட நோக்கினால் கணியான் களின் வாழ்க்கையில் ஒரு மறைமுகமான, கொத்தடிமை நிலை இருக்கிறது எனலாம்.

இப்படி உண்மையிலேயே தாழ்த்தப்பட்டவர்களாக இருக் கின்ற இவர்கள் அரசாங்கத்தாரால் தாழ்த்தப்பட்ட சாதியின ரைச் சார்ந்தவர்கள் என்ற அங்கீகரிப்பினைப் பெறவில்லை.

கணியான்சாதியினர் மற்றவர் தங்களைக் கணியான் என்று அழைப்பதை விரும்பவில்லை. இப்படி அழைப்பதைக் கேவலம் என்று நினைக்கின்ற கருத்துக்கூட இவர்களிடம் இருக்கிறது. மேளம் வாசிப்பவர்களை 'மேளக்காரன்' என்கிறார்கள். வில்லுப் பாட்டுக்காரரை 'வில்லுக்காரர்' என்கிறார்கள். இதுபோல. மகுடம் வாசிக்கும் கணியான்களை 'மகுடக்காரன்' என்றே அழைக்கவேண்டுமென்பது இவர்கள் விருப்பமாகத் தென்படு கிறது.

கணியான்கூத்தில் ஈடுபடும் தலைமைப்பாடகர் முப்பது வயதுவரை திருமண வாழ்க்கையில் ஈடுபடக் கூடாது என்ற நிலை முன்பு இருந்ததாகத் தெரிகிறது. அதற்குக் காரணம் என்னவென்றால் கூத்தில் உரக்கக் குரல் எடுத்துப் பாடவேண்டி யிருப்பதால், இல்லற வாழ்க்கையில் ஈடுபட்டால் சக்தியெல் லாம் வீணாகிவிடும் என்பது நம்பிக்கை. ஆனால் இப்போது இத்தகுக் கட்டுப்பாடெல்லாம் இல்லை. திருமணத்தில் வரதட் சணை வாங்குவதுமில்லை. கொடுப்பதுமில்லை.

கணியான் பெண்களுக்கு விவசாய வேலையெல்லாம் தெரியாது. வீட்டிலிருந்தபடியே கைத்தொழில் செய்வார்கள். கூடைசெய்தல், பனையோலையினால் ஏதாவது பொருள்செய்தல், பாய்முடைதல் போன்ற தொழில்களைச் செய்வார்கள். தங்கள் இனத்தவர் நடத்தும் கூத்தினை இவர்கள் பார்க்கக்கூடாது என்றக் கட்டுப்பாடு உண்டு.

கணியான் கூத்துத் தொழிலில் போதிய வருமானம் கிடைப்பதில்லை; கொடைநாட்களில் மட்டும் தான் இவர்களுக்குத் தொழில் நடக்கிறது. கொடைநாட்களிலும் செவ்வாய், வெள்ளி ஆகிய இருதினங்களில்தான் கூத்தினை நடத்தமுடியும். கூத்துத்தொழிலை விட்டால் வேறு தொழில் பார்க்க இவர்களுக்குத் தெரியாது. ஆகவே தங்கள் பிள்ளைகளைக் கல்விகற்க அனுப்புவதில்தான் விருப்பமாயிருக்கிறார்கள். கல்வியில் நாட்டமில்லாத பிள்ளைகளைத்தான் தொழிலுக்குப் பழக்குகிறார்கள். இதிலிருந்து குலத்தொழிலைக் காப்பாற்ற வேண்டும் என்ற எண்ணம் இவர்களிடம் இருப்பதாகத் தெரியவில்லை. இந்நிலை நீடித்தால் இக்கூத்துக்கலை மறைந்து போகக்கூடியச் சூழ்நிலையும் ஏற்படலாம்.

கணியான் சாதியினரில் படித்தவர்களின் எண்ணிக்கை குறைவு. மொத்தமே இவர்கள் ஐநூறுக்கும் குறைவான எண்ணிக்கையினரே இருக்கின்றனர். இதில் ஏழு விழுக்காட்டினர் வேறு தொழில் செய்கின்றனர். போலீஸ், ஆசிரியர் போன்ற வேலைகளை விரும்பியேற்கின்றனர்.

தமிழகத்தில் பழங்காலத்தில் வாழ்ந்துவந்த பல கலைஞர் கூட்டங்கள் தனித்தனியே சாதிப்பிரிவுகளாகி, தங்கள் பரம்பரையான கலையை மேற்கொண்ட தொழிலை விட்டுவிட முடியாமல் சிறிய கிராமங்களில் ஒதுக்கப்பட்டு, அங்குள்ள சிறு தெய்வ வழிபாடுகளுடன் இணைந்து சிறுநெறிக்குரிய சடங்குகளைத் தங்கள் கூத்து நிகழ்வில் சேர்த்துக்கொண்டு, அதே சமயம் பெருநெறிக்குரிய வழிபாட்டு முறைகளையும் ஓரளவு பின்பற்றி சமூதாய அங்கீகாரம் பெறவிரும்பும் நிலையில் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். இவர்களில் கணியான் என்ற கலைஞர் கூட்டமும் ஒன்று.

---

# நாட்டுப்புறக் கலைகளில் கணியான் கூத்தின் இடம்

அழகுப் பொருள்கள் மனத்திற்கு மகிழ்ச்சியைத் தர வல்லன. அத்தகைய பொருள்கள் படைக்கும் அழகியல் உணர்வைச் செயல் படுத்துவது கலையென்பது பொதுவான உணர்வு. இக்கலைகள் ஐம்புலன்களையும் ஈர்க்கவல்லன.

கலை பண்பாட்டுடன் தொடர்புடையது. எனவே, கலையைக் குறிப்பிடும்போது அவை மனிதஇனப் பண்பாடுகளைக்காட்டும் பிரதிபலிப்பு எனவும் கூறலாம்.

மேற் குறிப்பிட்ட கலைகள் நாட்டுப்புறக் கலைஞர்களால் உருவாக்கப்படும் போது நாட்டுப் புறக்கலையென்று கூறப்படுகிறது. நாட்டுப் புறக்கலைகள் எளியமக்களின் சார்பில் செழித்து வளர்பவை என்பதும் குறிப்பிடத்தக்கது.

இவ்வகைக் கலைகளில் மக்கள் தம் அன்றாட வாழ்வின் முத்திரைகள் பிரதிபலிப்பது இயற்கை. அத்துடன் நாட்டுப் புறமக்களின் பழக்கவழக்கம், நம்பிக்கைகள், சமூகப்பிரச்சினைகள் இவைகளும் இணைந்து விடுவது இயல்பு. ஏனெனில் இவைகளின் வெளிப்பாட்டு வாயில்களில் தான் நாட்டுப்புறக் கலைகள் அமைகின்றன.

நாட்டுப் புறக்கலைஞர்களிடம் மரபாக இக்கலைகள் வளர்க்கப்படுவதால் புராதனக்கலை என்ற தகுதியைப்பெற்ற போதிலும் அவ்வவ்கலைஞர்களின் ஆளுமைகளை இவ்வகைக் கலைகளில் கலப்பதென்பது இயல்பாகி விடுகிறது.

நாட்டுப்புறக்கலைகள் எவையென்பது பற்றித் தெளிவதற்கு முன் மேனாட்டார் கலையென்று எவைகளைக் குறிப்பிடுகின்றனர் என்பதைக் குறித்தால் தெளிவுகிடைக்க ஏதுவாகும். ஓவியம், சிற்பம், சித்திரம், ஊசிவேலைப்பாடுகள் போன்றவற்றைக் கலையென்ற வகைமைக்குள் நோக்குகிறார்கள்.

நம்மவர் கலையென்பதை நடனம், நாடகம், இசை போன்றவற்றுடன் இணைத்துப் பேசுவதைக் காணலாம். கலை கலைக்காகவே என்று கூறுவது ஒரு சார்பாளர் கருத்தாக இருந்தாலும் நாட்டுப்புறக் கலைகளைப் பொறுத்தமட்டிலும் அவை தொழிலும் பண்பாடும் சார்ந்தவைகளாக இருப்பது குறிப்பிடத் தக்கது.

நாட்டுப்புறக் கலைகளை முதலில் கதையுள்ளவை, கதையற்றவையென்று பிரித்துக் கொண்டு, கதையுள்ளவைகளை 1) செவிப்புலன் மிகுந்து கட்புலன் குறைந்தவை 2) கட்புலன் மிகுந்து செவிப்புலன் குறைந்தவை 3) செவிப்புலனும் கட்புலனும் இணைந்தவை என்று பிரிக்கலாம்.

கதையற்றவைகளை 1) கட்புலன் மிகுந்தவை 2) செவிப்புலன் மிகுந்தவை என்று இரண்டு பிரிவுகளில் அடக்கலாம். ஒவ்வொரு உட்பிரிவிலும் எந்தெந்த நாட்டுப் புறக்கலை அடங்குகிறது என்று இனங்கண்டு குறிப்பிட்டுப் பார்க்க வேண்டியது அவசியமாகிறது.

வரைப்படத்தின் மூலம் கணியான்கூத்து எந்தப் பிரிவில் எந்த உட்பிரிவில் அடங்கிப் பொருந்துகிறது என்று கணிக்க வேண்டும். அவ்வகையில் கணியான்கூத்து பலர்காணப் புலப் படுத்தும் நிலையில் கதைசார்ந்த வகைக்குள் அடங்கி, செவிப் புலனும் கட்புலனும் இணைந்து வரும் முறையில் அமைந்துள்ள நாட்டுப்புறக் கலையாகும்.

கணியான் கூத்தில் ஆட்டவகையைப் பிரித்துப் பார்க்கக் கூடாது என்றாலும் அதைத் தனியாகப் பார்க்க நேரும் போது கதையற்றவை என்ற பிரிவுக்குள் அடங்கும் என்று தோன்று கிறது. ஏனென்றால் இரண்டு ஆட்டக்காரர்கள் கதை நிகழ்ச்சி யின்படி துச்சாதனன் வருகிறான் என்றால் அவனுக்குரிய வேட மிட்டு ஒரு ஆட்டக்காரர் வருவதுமில்லை: ஆடுவதுமில்லை. கதைப் பாத்திரங்களோடு தொடர்புடைய ஆட்டமாகக் கணியான் கூத்தில் உள்ள ஆட்டம் இல்லையென்றுதான் கூற

வேண்டும். ஆனாலும் துச்சாதனன், பாஞ்சாலி ஆகிய இருவரும் தோன்றியுள்ளனர் போன்ற பாவனைகளுடன், நடைவேறுபாடு களுடன், உடலசைவுகளுடன், கைச்சைகைகளுடன், உணர்ச்சி வெளிப்பாடுகளுடன் கதையுடன் மறைமுகத் தொடர்பு கொண்ட நிலையில் கணியான் கூத்தின் ஆட்டக்காரர்கள் நடிக் கிறார்கள். இவர்களின் ஆட்டம் நடிப்பைச் சார்ந்தது இல்லை யென்று ஒதுக்கிவிடமுடியாது. இவர்கள் கணியான்கூத்து நிகழ்வில் நடிகர்களாகவே இருக்கிறார்கள். இவர்கள் பெண் வேடமிட்டு அதை மாற்றமல் தோன்றுவதைக் கொண்டு இவர் கள் வெறும் வேடதாரிகள் என்று கூறிவிடமுடியாது. அவ்வப் போது இதைப் பொருளுக்கும் பாத்திர உணர்ச்சிகளுக்கும் தக்கபடி இவர்கள் நடிக்கிறார்கள். நடிப்பைப் பின்வருமாறு மூன்று வகைகளாகப் பகுக்கலாம். 1) மிகைநடிப்பு 2) இயல்பு நடிப்பு 3) போலிநடிப்பு. இம்மூன்றில் மிகை நடிப்பு என்பது உலகநடப்பில் காணப்படும் ஒருவரது செயல் உள்ளவாறு காட்டாமல் அதை மிகைப்படுத்திக் காட்டுவ தாகும். இயல்பு நடிப்பு என்பது அச்செயலை உள்ளவாறு காட்டுவதாகும். போலி நடிப்பு என்பது கற்பனையையும் இயல் பையும் இணைக்காமல் இடைவெளிவிட்டுக் காட்டுவதாகும். கணியான்கூத்திலுள்ள ஆட்டக்காரர்களின் நடிப்பு மேற் சுட்டிய மூன்று பிரிவுகளுள் மிகைநடிப்பு என்ற வகைக்குள் அடங்கும். எடுத்துக்காட்டாக, காளியின் வருகை மிக்கப் பயங்கரவாதத்துடன் வன்மைகலந்த தன்மையில் (தலைமைப் பாடகரின் கதைக் கூற்று முடிந்தவுடன்) ஆட்டக்காரர்களின் நடிப்பில் வெளிப்படுத்தப்படுகிறது.

ஆட்டத்தைத் தனியாகப் பார்க்கும்போது கட்புலனில் மிகுந்து தோன்றுவது போலத் தெரிகிறது. ஆனாலும் மகுட இசை சேரும்போது செவிப்புலனின் பயனும் இணைந்துவிடு கிறது. இதனால் இந்த ஆட்டம் செவிப்புலனும் கட்புலனும் இணைந்து உணர்வதற்குரியது என்று கூறலாம்.

கணியான்கூத்து கதையுள்ள ஆட்டக்கலை, என்பதே முடி வாகிறது. கணியான்கூத்தில் உள்ள ஆட்டமும் வெளிப்படைக்

நாட்டுப்புறக் கலைகள்

பலர்காணப் புலப்படுத்தும் நிலை



கதைத் தொடர்பு பெருவிட்டாலும் மறைமுகக் கதைத் தொடர்பு பெற்றிருப்பதால் இதுவும் கணியான் கூத்தைக் கதையுள்ள ஆட்டக்கலையென்று புலப்படுத்திக் காட்டுகிறது.

கணியான் கூத்தின் கதைக்கூற்றில் செவிப்புலனும் கட்புலனும் இணைகின்றன. கணியான்கூத்தின் ஆட்டக்கலையில் கதைப்பொருள் ஓரளவு சேர்ந்து, கட்புலனும் செவிப்புலனும் இணைந்து காணப்படுகின்றன. இதனுல் கணியான் கூத்தின் கதைக் கூற்றையும் ஆட்டவகையையும் பார்க்கும் போது இது ஒரு நாடகம் சார்ந்த கூத்துக் கலையென்பது தெளிவாகப் புலப்படுகிறது.

---



# காளி கதை (அம்மன் பாட்டு) ஆய்வு மதிப்பீடு

**கதைச் சுருக்கம் :**

நெல்லை மாவட்டம் ஆரைக்குளம் என்ற ஊரில் எஸ். தங்கவேலு குழுவினர் நடத்திய காளிகதை என்ற கணியான் கூத்துப்பாட்டின் கதை அந்த வட்டாரத்தின் சிறு தெய்வங்களுள் பரவலாகப் பெருவழக்கான வழிபாட்டில் இருந்துவரும் அட்டகாளியைப் பற்றியதாகும்.

கைலைமலையில் சிவபெருமானும் பார்வதியும் அமர்ந்திருந்தபோது சிவபெருமான் உலக உயிரினங்களுக்குப் படியளக்கப் புறப்பட்டார். அதைச் சோதிக்க வேண்டுமென்று நினைத்த பார்வதி ஒரு தங்கச் சிமிழ்க்கூட்டில் இரண்டு சிற்றெறும்புகளை அடைத்து வைத்துச் சேலைமுந்தியில் முடிந்து கொண்டாள்.

அவர் திரும்பிவந்தபோது, அவள் எல்லா உயிரினங்களுக்கும் படியளந்து விட்டீர்களா? என்று கேட்டாள். அவர் ஆம் என்றார். அவள் தங்கச் சிமிழைக் கையில் எடுத்தாள். அதைப் புரிந்து கொண்ட ஆண்டவன் தன்னை அவள் பரிசோதனை செய்தாள் என்று கோபங் கொண்டு பூவுலகத்தில் நீ அட்டகாளியாகப் பிறப்பாயாக என்று சாபம் கொடுத்தார்.

நாகலோகத்தில் நாகமுடிராஜன் தனது மூன்று மனைவியருக்கும் பிள்ளையில்லாமல் இருந்து வந்தான். சிவபெருமானை நோக்கித் தவம் புரிந்தான். அந்தச் சமயத்தில் சிவபெருமான் நாகமுடிராஜனுக்கு மகளாகப் பார்வதியைப் பிறக்கும்படி வரம்

---

மூலபாடத்திற்குரிய கதைப் பாடல் பின்னிணைப்பில் இணைக்கப்பட்டுள்ளது. இக்கட்டுரையின் ஆய்வில் சிந்தனை வளர்ச்சிக்குதவிய பேராசிரியர் டாக்டர் சி. கனகசபாபதி அவர்களுக்கு நன்றி உடையேன்:

அளித்தார். அதேசமயத்தில் மகிடாசுரனை வதை செய்வதற்கு, பார்வதி அவ்வாறு பிறவியெடுக்க வேண்டும் என்றும் ஆணையிட்டார்.

அட்டகாளியாகப் பிறந்து வளர்ந்த பார்வதி மகிடாசுரனை அழிப்பதற்கு ஆயுதங்கள், வாகனங்கள் வேண்டுமென்று சிவபெருமானிடம் முறையிட, அவரும் திரிசூலத்தையும் சிங்க வாகனத்தையும் வரவழைத்தார். மகிடாசுரனிடம் தூதுசென்று வருவதற்கு வயிரவநாதனை உடன் அனுப்பினார்.

அதன்பின் காளி மகிடாசுரனின் மார்பைத் திரிசூலத்தால் குத்தி, அவன் மீண்டும் தோன்றாதபடிக்கு அவனுடைய ஒரு சொட்டு இரத்தமும் தரையில் சிந்தாதவகையில் வேதாளத்தைக் குடிக்கச் செய்து அழித்தாள்.

அப்போது காளி சிவபெருமானிடம் முத்துவரம் கேட்டவுடன் அவரும் முத்துப்பட்டறையைத் திறந்து அந்த இராம லட்சுமணர் என்ற களஞ்சியத்திலிருந்து முத்துக்களைக் கொடுத்தார்.

வாங்கிய முத்துக்களைச் சோதிக்க நினைத்த காளி, சிவபெருமான் மேலேயேப் போட்டாள். அதனால் சிவபெருமான் பல வெப்புநோய்களால் துயரப்பட்டார். உடனே பார்வதி தேவர்களைக் காவல்காக்க வைத்துவிட்டு இறைவனை வாழையில் கிடத்தி, மஞ்சளையும் தண்ணீரையும் அருகில் வைத்தாள். பிறகு தன் அண்ணன் திருமாலைக் காணச் சென்றாள்.

கண்ணன் வேப்பங்குழையைக் காளியிடம் கொடுத்து முத்தை இறக்கச் சொன்னார். அதன்படி காளி செய்யவும் இறைவன் தூங்கியெழுந்ததுபோல் விழித்துக் கொண்டார்.

காளிக்கு முத்துவரம் கொடுக்க நினைத்த கண்ணன், அதைக் கபடமாகக் கொடுக்க வேண்டுமென்று நினைத்து, முத்துக்களை வறுத்தெடுத்து அளித்தார். வகுத்தவர் பெரியவரானால் வறுத்தமுத்து வையகத்தில் முளைக்குமென்று அவளிடம் கூறினார்.

முத்துவரத்தை வாங்கிய காளி பூவுலகத்தில் சமயபுரம் இருக்கங்குடி முதலிய இடங்களில் மாரியம்மன், ஓங்காரி யம்மன், அட்டகாளி முதலிய பல பெயர்களில் வந்தாள்.

## கதைப் பின்னல்

மேற்கூறிய கதையின் கதைச் சுருக்கம் பின்வரும் கதைப்பின்னல் அமைப்பில் காணப்படுகிறது.




## 1. தொடக்கம் (Beginning)

கைலைமலையில் சிவபெருமானும் பார்வதியும் அமர்ந்திருத் தல், சிவபெருமான் படியளக்கச் செல்லுதல்.

## 2. சிக்கலும் விளைவும்

பார்வதி தங்கச் சிமிழுக்குள் சிற்றெறும்புகளை அடைத்து வைத்தல் — விளையாட்டான இச்செயல் சிக்கலின் தோற்றுவாய் ஆதல் — சிவபெருமான் சாபமிடுதல்.

நாகலோகத்தில் நாகமுடிராஜன் தனக்குப் பிள்ளையில் லாத காரணத்தால் சிவபெருமானை நோக்கித் தவமிருத்தல் — சிவபெருமான் வரம் அளித்தல் — அதில் மகிடாசுரன் வதை நோக்கமும் கலந்திருத்தல்.

காளியின் பிறப்பு — மகிடாசுரனை அழித்தல்.

## 3. உச்சகட்டம் (Climax)

காளி முத்துவரம் கேட்டல் – இறைவன் வரம் அளித்தல்.

## 4. சிக்கல் விடுவிப்பு

காளி முத்துக்களைப் பரிசோதனை செய்தல்–சிவபெருமான் நோய்ப்படுதல்–பார்வதி கண்ணனிடம்சென்று உதவிகேட்டல்-கண்ணன் வேப்பந்தழைகள் கொடுத்து முத்துக்களை இறக்கச் சொல்லுதல்–காளி அவ்வாறே செய்தல் – கண்ணன் கபடமாக முத்துக்களை வறுத்தெடுத்துக் கொடுத்தல்.

## 5. முடிவு (End)

அட்டகாளியாகப் பூவுலகத்தில் வந்து நிலையம்வாங்குதல்.

இவ்வாறு குறிக்கப்படும் ஐந்து வளர்ச்சி நிலைகளும் பழங் காலக் கூத்து என்ற நாடகத்தில் இடம்பெறும் ஐந்து சந்திநிலை கள் என்பது அடியார்க்கு நல்லார் உரையின் மூலம் அறியத் தக்கது.

மேலே குறித்த வரைபட விளக்கம் காளிகதையின் ஐந்து வளர்ச்சி நிலைகளைக் (Five stages of the plot) காட்டுகிறது.

கைலை, நாகலோகம், வைகுண்டம், பூவுலகம் ஆகிய நான்கு இடங்களும் கதைப்பின்னல் வளர்ச்சியில் முறையே இடம்பெறுகின்றன. காளிகதையின்படி உலக உயிர்களுக்கு உதவி செய்வோர் இறைவனும் இறைவியும் ஆகையால் கதை யின் தொடக்கம் முதலில் கைலையிலிருந்து தோன்றுகிறது. இவ்வாறு காளிகதைக்கு வேண்டிய இடப்பொருத்தம் (பின் புலம்) அமைகிறது. கடைசியில் பூவுலகத்துடன் கதை முடிந்து விடுகிறது. நடுவில் கதையின் வளர்ச்சி நாகலோகத்திற்கும் வைகுண்டத்திற்கும் செல்கிறது. இறைவன் இறைவி உதவி யால் பூவுலகில் உள்ள உயிரினங்கள் நலம்பெறுகின்ற தன்மை யைக் கதைப் பின்னல் சிறப்பாக எடுத்துக்காட்டுகிறது.

பார்வதி சிற்றெரும்புகளை அடைத்து வைத்த செயலி லிருந்து சிக்கல் விளைவு தொடங்குகிறது. இதில் உலக

உயிரினங்களைக் காப்பாற்ற வேண்டும் என்ற நோக்கம் உள்ளீடாக இருப்பதைக் காணலாம். சிக்கல் விளைவுப் பகுதியில் தான் காளியின் பிறப்பும் மகிடாசுரனின் வதமும் காட்டப்படுகின்றன.

காளிகதையின் பாடுபொருள் முத்துக்களைப் பற்றியது. அதாவது அம்மை போன்ற வெப்பு நோய்களைக் குறிப்பது. எனவேதான், காளி முத்துவரம் கேட்ட நிகழ்ச்சியும் பெற்ற நிகழ்ச்சியும் இந்தக் காளிகதையின் உச்சகட்டம் என்று கூறலாம்.

இக்கதையில், அடுத்து கண்ணன் தொடர்பாக வரும் செய்திகள், சிக்கல் விடுவிப்பு நிகழ்ச்சிகள் ஆகும். இவ்வாறு காளிகதையில் வரிசையாக நிகழ்ச்சிப்பொருத்தம் அமைந்திருக்கிறது.

அட்டகாளியின் கதைக்கு ஏற்றபடி பார்வதி பூவுலகில் அட்டகாளியாகப் பிறத்தல் என்பது கதை முடிவாகப் பொருத்தமாக அமைகிறது.

## பாத்திரப்படைப்பு:

காளிகதையில் மானிடப்பாத்திரம் இடம்பெறவில்லை. இதனுல் இக்கதையின் செய்தி மானிடருக்கு உரியதல்ல என்று ஆகிவிடாது. நோய் உண்டாதலும் துயரப்படுதலும் விடுவிப்பும் மனிதர்களுக்கு அப்பாற்பட்டவை என்பது இக்கதையின் கருத்து. இதனுல்தான் இதில் மானிடப்பாத்திரச் செயல் எதுவும் இடம்பெறவில்லை எனலாம்.

இக்கதையில் தெய்வப்பாத்திரங்களும் நாகர்பாத்திரங்களும், அசுரப்பாத்திரங்களுமாக, பதினைந்து பேர்கள் இடம் பெறுகின்றனர். இவர்களில் தெய்வப்பாத்திரங்கள் மிகுதி (9) இவர்களே எண்ணிக்கையில் மிகுந்தவர்கள். அடுத்த எண்ணிக்கை நிலையில் நாகரையும் (4) அ:சுரரையும் (2) முறையேக் காணலாம்.

தெய்வப்பாத்திரங்களில் தலைமைப் பாத்திரமாக வருபவள் காளியே, இவளே பார்வதியென்றாலும் இக்கதையின்படி காளியும் பார்வதியும் வெவ்வேறான இரண்டு பாத்திரங்கள் என்பது அறியத்தக்கது. இவ்விருவருள்ளும் காளியே கதையின் மையமாக இருக்கிறாள்.

இக்கதையிலிருந்து அம்மை போன்ற வெப்புநோய் கொடுத்துச் சோதனைக்குள்ளாக்குபவள் காளி என்பது புலப்படுகிறது. இந்த நோய் இறங்கி நீங்குவதும் காளியின் செயலால் தான் என்பதும் தெரிகிறது. நோய் நீங்கக் காரணமாகும் வேப்பங்குழைக்கு ஒரு புனிதஆற்றல் இருப்பதை இக்கதை உணர்த்துகிறது.

தேவர், நாகர், அசுரர் ஆகிய மூன்று உலகத்தார்களில் முதல் இருவரும் ஓர் அணியிலும், மூன்றாமவர் எதிரணியிலும் செயல்படக் காணலாம். முதல் இருவரும் நன்மையின் பக்கமும் மூன்றாமவர் தீமையின் பக்கமும் நிற்கின்றனர்.

நர்கவழிபாட்டைக் கொண்டவர்கள் நாகர்கள். நாகர்களிடையே தாய்வழிபாடும், தாய்வழிச் சமூகஅமைப்பும் ஏற்பட்டதைக் குறிப்பதுபோல நாகலோகத்தில் காளியின் பிறப்பு அமைந்திருக்கிறது. நாகர்கள் நல்லவர்கள் என்ற இக்கருத்து இலக்கியத்திலும் பயில்ப்பட்டு வருவதைக் காணலாம். சான்றாக, சிலப்பதிகாரத்தில் மங்கல வாழ்த்துப் பாடலில் பூம்புகார் நகரம் நாகர்உலகத்துடன் ஒப்பிட்டுக் கூறப்படுகிறது. காளி கதையில் நாகர்கள் பாத்திரங்களாக இடம்பெறுவது இக்கருத்தின் காரணமாகவே என்று கொள்ளலாம்.

மகிடாசுரன் எருமைத் தலையுடையவன். அவனைக் காளி அழித்தாள் என்ற நிகழ்ச்சி, ஒரு தாய்வழிச் சமூகஅமைப்பைச் சார்ந்த நாகர் என்ற இனக்குழுவினர் தங்களுக்குப் பகைமையான எருமையைக் குலக்குறியாகக் கொண்ட இனக் குழுவினருடன் போரிட்டு வெற்றிபெற்றதைக் காட்டும் என்று கருத இடமுண்டு. எருமையைக் குலக்குறியாகக் கொண்ட இனக் குழுவினர் உழவுத்தொழிலில் ஈடுபட்டவர்களாக இருக்கலாம்.

இக்கருத்து, மானிடப் பண்பாட்டுவியல் ஆய்வில் மேலும் சிந்திப்பதற்குரியது. மேலே சுட்டிய காரணங்களுக்காகவே நாகர் பாத்திரப்படைப்பும், காளியானவள் நாகர் இனக்குழு வில் இடம்பெறும் நிலையும் இடம்பெறுகின்றன.

## கதையின் கரு:

இக்கதையைக் காளியின் நோக்கத்தை வைத்து அணுக வேண்டும். ஏனெனில், காளிதான் நோய் தருபவளாக இருக் கிருள். நோய் நீக்குபவளாகவும் இருக்கிருள். இவ்வர்று காளி தான் சோதனை செய்பவளாக இருக்கிருள். நோய்தருவதும் நோய்நீக்கமும் மனிதனுல் ஆகக் கூடிய செயல்கள் அல்ல என்பதை உணர்ந்து, இவை, காளியின் சோதனையால் விளைந் தவை என்பதைத் தெளிவித்ததுதான் மனிதனுக்கு வேண்டிய மெய்யுணர்வு. இதுவே இக்கதையின் கருவாகும்.

இக்கதையில் மகிடாசுரனை காளி அழிக்கும் நிகழ்ச்சியும் கூட, நோய்நீக்கம் அல்லது தீமையைக் களைதல் என்ற கரு வோடு இணைந்த துணைக்கருவேயாகும்.

சிவன் கொடுத்த முத்துவரத்தைக் காளி அவன்மீதே சோதனை செய்தாள். அது வெற்றி பெற்றது. அதாவது சிவனுல் கூட வெப்புநோயைத் தடுக்க முடியவில்லை. இதனுல் இக்கதையிலிருந்து காளியின் நோய்தரும் நோக்கத்தை யாரா லும்—இறைவனுலும்—தடுத்து நிறுத்த முடியாது என்ற செய்தி மனித அறிவு நிலைக்கு அப்பாற்பட்டதாக உணர்த்தப் படுவது தெரிகிறது. இதிலிருந்து நோய் தருதல் என்பது காளி யின் செயலே என்ற கருவில் உள்ள அழுத்தம் புலப்படுகிறது. நோய் நீக்கத்திற்குக் கண்ணன் உதவ வந்தாலும். காளியின் வாயிலாகவே நோயை நீக்க முடிகிறது என்ற செய்தியும் கரு வின் அழுத்தத்தை மேலும் உறுதிப்படுத்துகிறது.

இக்கதையின் கரு காளிக்கு, சிவன் கண்ணன் என்ற பெருந்தெய்வங்களை விடவும் மிக்க ஆற்றல் அளித்திருப்பது ஏன் என்ற கேள்வி எழலாம். பெருந்தெய்வங்களோடு இணையாக இதுவரை சிறுதெய்வமாக இருந்து வந்த காளி

பெருந்தெய்வ நிலைக்கு உயர்த்தப்படுவதைக் கதையின் கருவிலிருந்து அறிய முடிகிறது. அதனால் சிறுநெறியாக இருந்து வந்த வழிபாடு பெருநெறியாக உயர்த்தப்படும் நிலையை இதில்காணலாம்.

சிறுநெறியென்பது தமிழகத்தில் தாழ்த்தப்பட்ட நாட்டுப்புற மக்களிடையே உள்ள ஒரு வழிபாட்டு முறை. தாங்கள் சமூக மதிப்பைப் பெற வேண்டும் என்ற உந்துதலில் இவர்கள், மேல்தட்டு நாகரிகமாகக் கருதப்படுகிற மக்களிடையே வழங்கி வரும் பெருநெறி என்ற வழிபாட்டு முறைக்கு இணையாகத் தங்களுடைய சிறுநெறி வழிபாட்டு முறையை உயர்த்த முயற்சிப்பதை இக்கதையின் கரு குறிப்பாக உணர்த்துகிறது.

கணியான் என்ற கலைஞர் கூட்டத்தார் பார்வதியின் கால் சிலம்பிலிருந்து பிறந்தனர் என்ற செய்தியும். சிறுநெறியைப் பின்பற்றுவோர் சமூக மதிப்பைப் பெறும் பொருட்டுப் பெருநெறியில் தங்களை இணைத்துப் பேசலாயினர் என்பதை எடுத்துக்காட்டுகிறது. இக்குறிப்பு 'கணியான் வரலாறு' என்ற கட்டுரையிலும் குறிப்பிடப்பட்டுள்ளது.

## குறியீட்டு விளக்கம்:

காளி கதையில் பிரம்மன், சிவன், திருமால் ஆகிய மூன்று தெய்வங்களும் முறையே படைத்தல், அழித்தல், காத்தல் என்ற முச்செயல்களைச் செய்பவர்களாக வருகிறார்கள். இவர்களை முறையே இந்த முச்செயல்களின் குறியீடுகளாக இக்கதை காட்டுகிறது.

காளி என்ற தெய்வம் துன்பந் தருதல், துன்பம் நீக்குதல் என்ற இரண்டு செயல்களையும் செய்பவளாக வருகிறாள். முதலில் சுட்டிய தெய்வங்களின் செயல்களிலிருந்து காளியின் செயல்கள் வேறுபட்டவை என்பதும் புலப்படுகிறது. இதனால் காளி துன்பந்தருதல், துன்பம் நீக்குதல் என்ற இரண்டு செயல்களின் ஒருமித்த குறியீடாக விளங்குகிறாள். எனலாம். அவள் அஞ்சத்தக்க தெய்வம். அதே சமயம் அவள் அரவணைக்கும்தெய்வம். இதுவே, காளி என்ற தெய்வவழிபாடு குறித்த நாட்டுப்புற மக்களின் நம்பிக்கை என்று அறியலாம்.

இக்கதையில் சொல்லப்படும் முத்து என்ற சொல்லுக்குரிய பொருள் இறுதிவரையிலும் சுட்டப்படவில்லை. இது அம்மை நோயை அந்நோயின் வெளிப்புற வடிவம் காரணமாகக் குறிப்பிடுகிறது. இன்றும் நாட்டுப்புறவழக்கில் முத்து என்ற சொல் அம்மைநோயைக் குறிப்பதற்கு வ்ழங்கப்பட்டு வருவதைக் காணலாம். இதிலிருந்து, இக்கதையில் சொல்லப்படும் முத்து அம்மைநோயின் குறியீடு என்று அறியலாம்.

## காளிகதையின் அமைப்பியல் :

கணியான் கூத்தாக நடத்தப்பெறும் இக்கதை முழுவதும் பாட்டாகவே வரவில்லை. ஆனாலும், பாட்டே இதில் பெரும் பான்மையாக ஒலிக்கிறது. இடை இடையே கதையை உரை நடையில் சொல்லும் பாங்கும் இடம்பெறக் காணலாம். மேலும், பாட்டும் உரைநடையும் கலந்த நடைப்பாங்கு உடைய உரைப்பாட்டும் இடையே ;கலந்து வருகிறது. இந்த மூன்று முறைகளையும் முறையே உதாரணங்கள் மூலம் கீழேக் காணலாம்.

குழந்தைவரம் யில்லையென்றால் — நான்
குவலயத்திற்குச் செல்லவே மாட்டேன்
நாட்டிற்குச் செல்லவே மாட்டேன் — என்
நானிலத்தை ஆளவே மாட்டேன்
பிள்ளை வரம் வாங்காமல்
பேருலகை ஆளமாட்டேன்
மதலைவரம் வாங்காமல்
மாநிலத்தை ஆள மாட்டேன்

இந்த எட்டுவரிகளும் பாட்டாக இசைத்துக் கணியானால் பாடப்படுகின்றன.

“பிள்ளைவரம் வாங்காமல் உலகிற்குப் போகவே மாட்டேன். என் உயிரை வேண்டுமானாலும் மாய்த்துக் கொள்ளுகிறேன். நாகராஜன், பகவான் முன்னாலே உயிரை மாய்த்துக்கொள்ள முயற்சி செய்கிறான். இதையறிந்தாள் அம்மா மகேஸ்வரியானவள்”.

இந்த நான்கு வாக்கியங்களும் உரைநடையாக இயல்பான பேச்சின் ஒலியோடு அதே தலைமைப்பாடகரால் சொல்லப்படுகின்றன.

மேலே எடுத்துக் காட்டிய பாட்டை அடுத்து வருகின்றன இந்த உரைநடை வாக்கியங்கள்.

அன்று,
நான் சாபமிட்டேன்

முதலாவது சாபம் அத்திநாட்டை ஆண்டு வருகிறவனுக்குத் தட்சனுக்கு மகளாகப் பிறந்தாய். தக்கவயதிலே நான் ஆண்டிவேடம் கொண்டு மாலைசூடிக் கொண்டேன்.

இரண்டாவது பிறவி,
கலியுகத்தை ஆளுவதற்கு
அட்டகாளியாகப் பிறக்க வேண்டுமென்று
சொன்னேனல்லவா...
ஏன் சொன்னேன்

மகிடாசுரன் என்பவனை - அதாவது
வரமுனியாகிய ஒருவன்
அகத்தியர் கொடுத்த சாபத்தால்
மகிடாசுரனாக இருக்கிறான்
அவனை அதம் செய்ய வேண்டும்
ஏன் செய்ய வேண்டும்

மேற்சுட்டிய வரிகளைத் தலைமைப்பாடகர் கூறிய முறை இதுதான். அவர் பாட்டாக இவ்வரிகளை இசைத்துப் பாடவில்லை. இயல்பான பேச்சின் தன்மையுடனும் அவர் சொல்லவில்லை. பாட்டைப் போல, அதே சமயம் பாட்டிலிருந்து வேறுபட்ட ஓசையில் வெளிப்படுத்தினார். இதனால் இதை உரைப் பாட்டு முறை என்று கூறுவது பொருத்தமாகும்.

காளி கதையில் இடம்பெறும் பாட்டில் இலக்கியத்திற்குரிய பாட்டியல் இலக்கணம் அமையவில்லை. மேலும் இப்பாட்டில் பண்ணமைப்பில் பாடப்படும் இசைப்பாட்டின் தன்மையும்

இடம் பெறவில்லை. இப்பாட்டு, தலைமைப் பாடகர்க்குத் தோன்றும் இசைப்பு முறைகளில் பாடப்படுகிறது. இந்த இசைப்பு முறைகள் வழிவழியான வாய்ப்பாட்டு மரபில் உருவாகிப் பழக்கத்தில் வந்திருக்கலாம். இது மேலும் ஆய்வுக்குரியது.

இதில் வரும் உரைநடை இயல்பான பேச்சுத் தன்மை கொண்ட இயல்பகுதி என்று கருதலாம். இதன் நோக்கம் கதைப்பொருளை எளிமையாக்குவதாக இருக்கலாம்.

இதிலிருந்து காளிகதை என்ற கணியான் கூத்தில் இசையும் இயலும் இணைந்து வருவதைக் காணமுடிகிறது.

இத்துடன் சேர்ந்துவரும் உரைப்பாட்டு என்ற முறை பாட்டின் இறுக்கத்தை நெகிழ்வுபடுத்துவதாக இருக்கலாம். இது நாடகத்தில் இடம்பெறும் தன்மையது என்று கருத இடமிருக்கிறது.

தலைமைப் பாடகரின் கதைக் கூற்றில் இசையும், உரைநடையும், உரைப்பாட்டும் இடம்பெறுவது போல, பாத்திரக் கூற்றிலும் இடம்பெறுகின்றன. இதனாலும் இக்கணியான் கூத்திலுள்ள இயல், இசை ,நாடகச் சார்புத் தெரியவருகிறது.

## கதை கூறும் உத்திகள்:

கதை கூறும் முறையைப் பொதுவாகப் பார்க்கும் போது, தலைமைப்பாடகர் கதைக்கூற்று, பாத்திரக் கூற்று, பின்பாட்டுக்காரர் கூற்று என்ற மூன்று உத்திகள் இடம்பெறுவதைக் காணலாம்.

அவர் இயல், இசை, நாடகம் மூன்றையும் பொருத்தமாக அங்கங்கே இணைக்கிறார். இதுவே இக்கணியான் கூத்தில் சிறப்பு மிக்க தலைமை உத்தி என்று மதிப்பிடலாம்.

தான் பாடும்போது மகுடஓசை ஓங்கி வெளிப்படாதவாறு இயக்குகிறார்.

ஆதிநல்ல கைலையிலே

ஆங்கே யார்யாரோ வீற்றிவர
ஆதிபகவானும் பார்வதியும்
பச்சைமாலுடனே லட்சுமியும் — மகுட ஓசை

தன்பாட்டு முடிந்ததும் பெண்வேட ஆட்டக்காரர்களின் சலங்கைஒலி மிகுதியாகக் கேட்கும்படி இயக்குகிருர்.

பாத்திரத்திற்கேற்றபடி பாட்டுவந்தாலும் சரி, உரைநடை வந்தாலும் சரி குரல்மாற்றம் செய்து காட்டுகிருர். கதை கூற லில் கேள்வி கேட்பதும் விடை கூறுவதும் பாட்டிலும் உரை நடையிலும் இடம்பெறுகிறது.

நாகமுடிராஜன் ; பெண்கொடியே வார்த்தையொன்று
சொல்லக்கேளாய் ... ...
வாடிப்போய் இருப்பதென்ன?

மனேவிகள் : சுவாமி ! நாதா ! பிராணபூபதியே ! இந் நாட்டிலே எங்களே மாலேமணம் சூடி நாம் நான்குபேர்களும் எத்தனே ஆண்டு காலம் எடுத்தாள்வதற்கு ஒரு குழந்தையில்லாமல் மாநிலத்தை ஆண்டு வருகிரேும்? எங்களேப் பார்த்துப் பெண்களெல்லாம் பேசுகிருர்கள். என்ன பேசுகிருர்கள் (பின்பாட்டுக்காரர்)

பிள்ளேயில்லாத பாபியென்று
பெரியவர்கள் பேசுகிருர்கள்
மழலேயில்லாத பாபியென்று
மாநிலத்தில் பேசுகிருர்கள்
குழந்தையில்லாத பாபியென்று
குவலயத்தில் பேசுகிருர்கள்
இருசி நல்ல மலடியென்று
எல்லோரும் பேசுகிருர்கள்
பின்பாட்டு + மகுடம்

பாட்டில் ஒன்றின் பலபெயர்களே அடுக்கிக் கூறுகிருர். நாகமுடிராஜன் சிவபெருமானே நினேத்துத் தவமிருக்கிருன். அந்தச் சிவபெருமானேப் பலபெயர்களில் தலேமைப்பாடகர் அடுக்கிக் கூறுகிருர்,

பகவான்! சங்கரன், சதாசிவன்! நிமிலன்! இறையவன்! சங்கராபரணன்! சந்திரசேகரன்! அடியார்க்கினியவன்! காலகாலன்! காலச் சந்திரச்சூடன்! காமாரகன்! சஞ்ஜாலன்! திரிபுராணந்தன்! திரிலோகநாதன்! திரிசூலன்! திகம்பரன்! திருமால்வள்ளுவன்!கபாலகன்! விபூதி ருத்டாட்ச மாலேயணிந்தவன்! அந்த சாட்சாத் சிவபெருமானே நினேந்து தவமிருக்கிருர்.

பாட்டின் சிலதொடர்களே மீண்டு வரலோடு இசைக்கிருர். நாகமுடிராஜன் பிள்ளே வரம் வேண்டித் தவமிருப்பதைத் தலேமைப் பாடகர் கீழ்க்கண்டவாறு பாடுகிருர்.

செப்புரத குடத்திலிட்டு—அந்தக்
செப்புநிறைய செவ்வரளித்தேங் காய்வைத்துச்
செவ்வரளித் தேங்காய் மேலே
எலுமிச்சங் கனியை வைத்து—அந்த
எலுமிச்சங் கனியின் மேலே
கொலுமிச்சங் கனியைவைத்து—அந்தக்
கொலுமிச்சங் கனியின் மேலே
கோழிமுட்டையைத் தான்வைத்து—அந்தக்
கோழிமுட்டையின் மேலே
குண்டுமணியைத்தான் வைத்து—அந்தக்
குண்டுமணி மருப்பின்மேலே
ஊசியைத்தான் வைத்து—அந்த
ஊசியின்மேலே
உடையவனேத் தானழைத்து—அந்த
உடையவனும் தவமது புரிந்துவருகிருன்.

உரைநடையில் அறிவுறுத்தல் என்ற நிலேயில் உலக உண்மைகளே விளக்குகிருர். ஈசன் உலக உயிர்களுக்குப் படியளக்கச் சென்ருன். அதை விளக்கமாகக் கூறுகிருர்.

ஓரறிவு படைத்த அதாவது மரம், செடி, கொடிகள் இவைகளுக்கெல்லாம் ஓரறிவு என்றும் இருந்த இடத்திலே கிரகித்து உண்ணக் கூடியவைகளுக்கு இரண்டறிவு என்றும் ஆகாரம் இருக்கும் இடம்தேடி வாசனேயறிந்து உண்ணக்கூடியவை

களுக்கு நான்கறிவு என்றும் விலங்குகளுக்கு ஐந்தறிவு என்றும் நம்மைப் போன்ற மனிதர்களுக்கெல்லாம் ஆறறிவு என்றும் நான்முகனுகிய பிரம்மதேவன் படைக்கிருர்.

பெரும்பாலும் கதை கூறலேயே முதன்மையாக்குகிருர்.

இடையிடையே ஒன்றை வர்ணித்துக் கூறுகிருர். பார்வதி தேவி குழந்தையாகப் பிறக்கப்போகும் நாட்டினைப் பற்றிக் குறிப்பிடுகிருர்.

அந்த நாட்டினிலே
நல்லநாடு
பார்பல புகழும் நாடு
கோலமழை பொழியும் நாடு — நல்ல
குளிர்ந்த தென்றல் வீசும் நாடு
மும்மாரி மழை பொழியும் நாடு — அங்கே
முக்காலும் பயிர் விளையும்
இஞ்சி பிஞ்சி பூக்கும்
இருவாட்சியும் மலரும் — அந்த
நாகலோகப் பட்டணத்திலே ... ... ...

இலக்கிய மேற்கோள் காட்டுவதோடு இலக்கியச் சொல்லேயும் கலந்து கூறுகிருர்.

நாகமுடிராஜன் நாநிலத்தை கண்டு வருகிருன். அன்பு, ஆதரவு, ஈவு, இரக்கம். தயவு, தாட்சண்யம் வைத்து வாழ்ந்தார்.

அதுமட்டுமின்றி, ... ...

வேறு எவ்வாறு? (பின்பாட்டுக்காரர்)

அஞ்சாமை, ஈகை, அன்பு, ஊக்கம் இந்நான்கும் எஞ்சாமை வேந்தர்க் கியல்பு என்ற வள்ளுவர் வாக்கின்படி அம்மா நிலத்தை அம்மன்னன் ஆண்டுவருகிருர்.

பாத்திரக்கூற்றுப் பின்வரும் உத்திகளைக் கொண்டு அமைவதைக் காண முடிகிறது.

பாத்திரக்கூற்றுப் பாட்டாகவும் உரைநடையாகவும் அமைகிறது.

பாத்திர உரையாடல் நாடகப் பாங்கை உண்டாக்குகிறது.

யார் யாரிடம் ;பேசுகிறார்கள் என்பதைக்காட்ட விளிச் சொற்கள் பயன்படுத்தப்படுகின்றன.

கேளாய்! போன்ற ஏவல் வினை அமைப்பு உரையாடலில் இடம் பெறுகிறது.

'என்றாய்' என்ற ;வினைமுற்று முடிவு பாத்திரக்கூற்றின் முடிவைக் காட்டப் பயன்படுகிறது.

பேச்சுவழக்குமுறையில் இருக்கக் கொச்சைச்சொல் வடிவங்கள் பெரும்பான்மையும் கலந்துவிரவி அமைவது இயல் பாகிறது.

பாத்திர மனவோட்டமும் காணமுடிகிறது. பாட்டாக வந்தாலும் சரி, உரைநடையில் அமைந்தாலும் சரி இயல் பானபேச்சுமுறை மற்றொரு தலைமைஉத்தி என்று கருதும் அளவிற்கு இடம்பெறுகிறது,

பின்பாட்டுக்காரர் கூற்றில் பின்வரும் உத்திகள் வெளிப் படுவதைக் காணலாம்.

தலைமைப் பாடகரைக் கேள்விகேட்கிறார் நாகமுடிராஜன் தன் மனைவிகளைப் பார்த்துக் கேட்டதாகத் தலைமைப் பாடகர் சொல்லி வருகிறார்.

உங்கள் திருவதனங்கள் ஏன் வாடியிருக்கிறது என்று அந்த மன்னன் கேட்ட வார்த்தைக்கு மங்கையர்கள் உரைக் கிறார்கள்.

என்ன உரைக்கிறார்கள் (பின்பாட்டுக்காரர்)

சில சமயங்களில் தலைமைப்பாடகர் பாடிமுடித்த பாட்டு வரிகளையோ உரைநடை வரிகளையோத் திரும்பக் கூறுகிறார்.

தலைமைப் பாடகர் கதை சொல்லி வரும்போது பொருத்த மான இடங்களில் ஆமாம் போடுகிறார்.

அடுத்த நிகழ்ச்சியைப்பற்றி ஆர்வத்துடன் கேட்கிறார். தலைமைப்பாடகர் முடித்தவரிகளுக்கு உணர்ச்சி அழுத்தமும் இரசிப்புத் தன்மையும் கொடுப்பார்.

மாலைநேரத்திலே கதிரவனின் ஒளியைக் கண்ட செந்தாமரை மலர்ந்தால் பார்க்க அழகாய் இருக்கும்.

நல்லாத்தான் இருக்கும் (பின்பாட்டுக்காரர்)

விட்ட இடத்திலிருந்து தொட்ட இடத்திற்குக் கதையை நினைவூட்டுகிறார்.

நல்ல கருத்தாயின் அதை மீண்டும் வரக் கூறுகிறார்.

பாத்திரத்தின் மீது பரிவு தோன்றப் பேசுகிறார்.

சிறப்பாக அவையோர் நிலையிலிருந்து அவையோர்க்காகவே கதையைக் கேட்கிறார்.

இவ்வாறு காளிகதையில் காணப்படும் கூற்றுமுறை உத்திகளுக்குரிய எடுத்துக்காட்டுக்களை இக்கதையிலிருந்தும் நாடகப்படுத்தும் முறையிலிருந்தும் ஆங்காங்கே கண்டு கொள்ளலாம்.

இக்காளிகதையென்ற கணியான் கூத்தை ஒட்டு மொத்தமாக மதிப்பிடும்போது இது 'காளி' என்ற சிறுதெய்வத்தின் கதையை இயல், இசை, நாடகம் என்ற முக்கலைத் திறன்களுடன் கருவை வெளிப்படையாகக் கூறாமல் குறியீட்டு முறையுடன் அவையோர்க்கு உணர்த்தக்கூடிய படைப்பு முறை கொண்டது என்பதையறியலாம்.

நாட்டுப்புற மக்களிடையேயுள்ள வழிபாட்டுமுறைச் சமூகத்தில் அங்கீகரிப்புப் பெற மேல்தட்டு மக்களிடையேயுள்ள வழிபாட்டுடன் இணைத்துக் கூறும்நிலை. அதாவது பார்வதியுடன் காளியின் பிறப்பை இணைத்துக் கூறும்நிலை.

காளிக்கு சிவன், கண்ணன் போன்ற தெய்வங்களைவிட மிக்க ஆற்றல் உண்டு. பெருந் தெய்வங்களோடு இணையாக இருந்துவந்த காளி பெருந்தெய்வங்களையும் சோதனை செய்பவளாக மாறும்நிலையில் சிறுநெறியாக இருந்துவந்த வழிபாடு பெருநெறியாக உணர்த்தப்படுதல்.

காளி – துன்பம் தருபவள்; துன்பம் நீக்குபவள். இது நாட்டுப்புற மக்களின் நம்பிக்கையாகத் தெரிகிறது.

—

# காளிகதை (அம்மன் பாட்டு) — மூலபாடம்

**மகுடம்:-**

நித்திய சுந்தரி
வால பரமேஸ்வரி
என்னைச் சத்தமாய் நினைக்கின்ற
கொஞ்சப் பேர்களைக் குத்தி குடல் வாங்கிக்
கழுத்திலே மாலை கொள்வாய்
ஒய்யாரமாய்
திரிபுராநந்தி

ஓம் ஆதிபராசக்தி
அட்டகாளித் தெய்வமே
நீ வருகவே
வருகவே (பின்பாட்டுக்காரர்)

காளியுட கதை பாட
கதைகள் பாட
கணபதியே நாவில் வாராய்
என்றுமே
கணபதியே நாவில் வாராய் (பின்பாட்டுக்காரர்)

ஆதி நல்ல கைலையிலே
ஆங்கே யார்யாரோ வீற்றிவர
ஆதி பகவானும் பார்வதியும்
பச்ச மாலுடனே லட்சுமியும் (பின்பாட்டு + மகுடம்)

தேவர்களும்
மூவர்களும்
தெய்வ நல்ல கைலையிலே
இந்திரனும் சந்திரனும்
இமயவனும் மறையவனும்
நான்முகனும் நன்முகனும் – அந்த
கனர்க் கோட்டு மாமுனியும்

முப்பது முக்கோடி தேவர்களும் – நல்ல
தவசி மார்திசைகளும் (பின்பாட்டு + மகுடம்)

ஆதிகைலையங்கிரிமலையில் ஆண்டவனாகிய சிவ பெருமான், அம்மையாகிய உமா மகேஸ்வரியாகிய – ... ...
(ஆமா)

அந்த பார்வதாதேவியும் கைலையங்கிரியில் அமர்ந்திருக் கின்ற நாளையில் நான்முகனாகிய பிரம்மதேவன் 16 மூலை களையும் பிரித்து ஈ, எறும்பு, யானை முதல் என்பத்துநான்கு இலட்சம் ஜீவன்களைப் படைத்தான். எது என்றால்,

ஓரறிவு படைத்த அதாவது மரம், செடி கொடிகள், இவைகளுக்கு எல்லாம் ஓரறிவு என்றும் இருந்த இடத்திலே கிரகித்து உண்ணக் கூடியவைகளுக்கு இரண்டறிவு என்றும் ஆகாரம் இருக்கும் இடம்தேடி வாசனையறிந்து உண்ணக் கூடியவைகளுக்கு மூன்றறிவு என்றும் பறந்து செல்லக் கூடிய வைகளுக்கு நான்கறிவு என்றும் விலங்குகளுக்கு ஐந்தறிவு என்றும் நம்மைப் போன்ற மனிதர்களுக்கு எல்லாம் ஆறறிவு என்றும், நான்முகனாகிய பிரம்மதேவன் படைக்கிறான்.

அதாவது ஈரேழு உலகத்திலே ஈ, எறும்பு, யானை முதல் என்பத்து நான்கு லட்சம் ஜீவன்களை பிரம்மதேவன் படைக்க அந்த படைத்த மனுக்களுக்கு எல்லாம் பகவான் என்ன செய்கிறான்?
(மகுடம் + பின்பாட்டு)

படைத்துவிட்ட மனுக்களுக்குப்
படியளக்க வேணுமின்னு
ஒருநாள் தினமதிலே
நடைபெற்ற ஒரு நாளையிலே
அடி வாடியம்மா பெண்மணியே தோழிகளே
பார்வதி தேவியிடம்
ஆதிபகவான் போய்
படைச்சிவிட்ட மனுக்களுக்கு
படியளந்து வர்ரேன்
கொடுத்துவிட்ட மனுக்களுக்கு
மாரியளந்து வாரேன் (மகுடம் + பின்பாட்டு

ஆதிசங்கரனாகிய பகவான் சொல்லுகின்ற வார்த்தையை உமாமகேஸ்வரியானவள் காதில் கேட்டு ஆண்டவனாகிய பகவானைநோக்கி சிவசக்தியாகிய பார்வதிதேவி சொல்கிருள். என்ன சொல்கிறாள்?

சிவபெருமானே! இந்த உலகம் தோன்றிய நாள் முதலாக நாம் இருவருமே இந்த கைலையங்கிரி மலையில் அமர்ந்திருக்கின்றோம். அதாவது,

சிவபெருமான் சூரியனாகவும்,
ஆமாம் (பின்பாட்டுக்காரன்)
பார்வதாதேவி சந்திரனாகவும்
ஆமாம் (பின்பாட்டுக்காரன்)
இருவரும் இங்கு அமர்ந்திருக்கின்றோம்
பகலிலே ஆயிரங்கோடி கடலலைகளுடன்
உலகில் புறப்பட்டுச்செல்கின்றான் சூரியபகவான்
அவன் இல்லையென்றால்
உலகமெல்லாம் இருளாக இருக்கும்
இரவிலே முழுமதி தன்ஒளியைப் பரப்பி
உலகமக்களுக்கு ஒளிவீசிக் கொண்டிருக்கிறார்
அந்த
மதியில்லை யென்றால் இருள்மயமாக இருக்கும்
ஒன்று சிவனிருக்க வேண்டும்
அல்லது சக்தியிருக்க வேண்டும்
இருவேரும் சென்றுவிட்டால்
இருளாக இருக்கும்
மகேஸ்வரி பார்வதாதேவி
இருவேரும் சென்றால்
இருளாக இருக்குமல்லவா?

நான் மட்டும் சென்று படியளந்து வருகிறேன் என்று உமாமகேஸ்வரியாகிய அந்த பார்வதிதேவியிடம் சொல்லிவிட்டு, பார்வதியை அமைத்துவிட்டுப் படியளக்க வருகிறார்.

நாழியிலே தினையெடுத்து
நாட்டுக்குத்தான் ஏகி வருகிருர் (மகுடம் + பின்பாட்டு)

உலகமெலாம் படியளந்தார்
அணிற்பிள்ளைத் தேரைமுதல்
கருக்குள்ளேயுள்ள பாலகன்வரைக்கும்
(மகுடம் + பின்பாட்டு)

ஆண்டவனாகிய பகவான் ஈரேழு உலகமெலாம் சென்று எல்லா உயிர்களுக்கும் ஒருவருக்கும் குறைவில்லாதபடி ஆண்டவன் படியளக்கிறார். அந்த ஆண்டவன் படியளக்கும் போது பார்வதி நினைக்கிறாள். சிவபெருமான் யாருக்கெல்லாம் படியளக்கிறார்கள், யாருக்கெல்லாம் படியளக்கவில்லை என்பதை நாம் இன்று அறியவேண்டுமென்று, பரிசோதனை செய்து பார்க்க வேண்டுமென்று அம்மை பார்வதி நினைத்தாள். என்ன செய்கிறாள் என்றால்.........?

கடைந்தெடுத்த சிமிழியிலே
விருப்பமுடன் கடைந்தெடுத்த
இன்பமுடன் கடைந்தெடுத்த
சிமிழி நல்ல சிமிழியில்
அதிலிரண்டு சிற்றெரும்பை
ஆணும் பெண்ணுமாகப் பிடித்தெடுத்து
சிற்றெரும்பைப் பிடித்தெடுத்தாள்
சேலைமுந்தியிலே முடிந்தாள்

ஆண்டவனாகிய பரமேஸ்வரனைப் பரிசோதித்துப் பார்க்க வேண்டுமென்று ஔவையாகிய பார்வதாதேவி இரண்டு சீவனாகிய சிற்றெரும்பைப் பிடித்துச் சிமிழிக் கூட்டிலே அடைத்து, சேலைமுந்தியிலே முடிந்திருக்கின்றாள். அப்படி முடிந்திருக்கிற நேரத்திலே பகவான் என்ன செய்கிறாரென்றால்

பதினாறு உலகத்திலும்
படியளந்த பகவான்தானே
கைலயகத்திற்குத்தான் வருவராகி
அங்கே,
நீட்டின கால்மடக்காமல்
கவிழ்ந்த தலை எடுக்காமல்
(மகுடம் + பின்பாட்டு)

பார்வதாதேவி அங்கே மௌனமாக இருக்கிருள். பகவான் ஈரெழு உலகமெல்லாம் சென்று எல்லா உயிர்களுக்கும் படியளந்துவிட்டுக் கைலயங்கிரிமலேக்கு வருகிருர். அந்த பார்வதி பகவான் ஏனென்று கேட்கவில்லே. எடுத்த வார்த்தை கேட்கவில்லே. வாவென்று கேட்கவில்லே. வந்தனங்கள் புரியவில்லே. உடனே ஆண்டவன் கோபமாகி ஆண்டவன் பகவான் சொல்லுகிருர். அம்மா உமாமகேஸ்வரி பார்வதா தேவியே இந்தக் கைலயங்கிரி மலேயில்

ஏனடி மௌனமாய்
மங்கை நீதானே
சொல்லு நீதானே

(மகுடம் + பின்பாட்டு)

ஆண்டவன் பகவான் பார்வதி மகேஸ்வரியானவள் இடத்திலே கேட்கிருர் ஏனடி நீ மௌனமாக இருக்கிருய் என்று கேட்கிருர்.

சிவபெருமானே! பகவானே! தாங்கள் படியளக்கச் சென்ற போது நான் தனியாகவே அமர்ந்திருந்தேன். அந்தநேரத்திலே இங்கு இரண்டு சீவனுகியச் சிற்றெரும்புகள் வந்தன. அவைகளே நான் பத்திரமாகவேப் பிடித்து வைத்திருக்கிறேன். அவைகளுக்கு நீங்கள் படியளந்தீர்களா? என்று ஆண்டவன் பகவானிடத்திலே கேட்க, பகவான் அந்த சிமிழிக் கூட்டைக் கொண்டுவா என்று சொல்ல,

சேலே முந்தியிலே முடிஞ்சிருந்த - அந்த
முந்தியிலே முடிஞ்சிருந்த
சிமிழியினேத் தானெடுத்துத் தானவிழ்த்து
திறந்து பார்க்கும் போது
தினேயரிசி இருக்கக் கண்டாள் – அந்தத்
தினேயரிசி இருக்கக் கண்டாள்

(மகுடம் + பின்பாட்டு)

ஆண்டவன் என்றும் பகவான் என்றும் பக்தர் என்றும் பார்க்காமல் பரிசோதனே செய்தாள். ஆண்டவன் ஆங்கார கோபமாகி ஏ – பார்வதி! பகவானென்றும் பக்தனென்றும் மதியாதபடி என்னேச் சோதனேபண்ணி இதற்கு ஆளாகிவிட்டாய்.

அதனால் என்னைப் பிரிந்து நீ மூன்று பிறவிகள் எடுக்க வேண்டும் என்று சாபம் கொடுக்கிறார்.

யாருக்குச் சாபம் கொடுக்கிறார்.
(பின்பாட்டுக்காரர்)

பார்வதி தேவிக்குச் சாபம் கொடுக்கிறார்

அங்கே,

முதலாவது தக்கனுக்கு நீ மகளாகவேப் பிறக்கவேண்டும். இரண்டாவது பிறவி கலியுகத்தை ஆளுவதற்கு அட்டகாளியாகவேப் பிறக்கவேண்டும். மூன்றாவது பிறவி பேச்சியாகவே நீ பிறந்து பிணமும் சோறும் திங்கவேண்டும். அந்த இரண்டாவது பிறவியில் அட்டகாளியாய்ப் போய், பார்வதாதேவி குழந்தையாக யாருக்குப் பிறக்கப்போகிறாள் என்றால் ...

அந்தநாட்டினிலே நல்ல நாடு
பார்பல புகழும் நாடு
கோலமழை பொழியும்நாடு—நல்ல
குளிர்ந்த தென்றல் வீசும்நாடு
மும்மாரி மழை பொழியும்—இங்கே
முக்காலும் பயிர் விளையும்
இஞ்சி பிஞ்சி பூக்கும்
இருவாட்சி மலரும்—அந்த
நாகலோகப் பட்டணத்தில்
அழகு நாகமுடிராஜன்
அந்த நாகமுடிராஜனும்
நாககன்னியென்ற பெண்கொடியும்— அந்த
நாகக்கன்னி நளினக்கன்னி மாங்கனியும்
மன்னவனும் தேவியும்—அவர்கள்
மனமகிழ்ந்து ஆண்டு வருகிறார்கள்
எங்கே ஆண்டு வருகிறார்கள்? (பின்பாட்டுக்காரர்)

நாகலோகத்திலே நாகக்கன்னி தோகைக்கன்னி நளினக்கன்னி என்று சொல்லக்கூடிய மூன்று பெண்களோடு மாலை மணம் சூடி மன்னர் ஆண்டு வருகிறார். அந்த மன்னன் ஆண்டு வருகிறார். அவர் பெயர் நாகமுடிராஜன். மாநிலத்தை எவ்வாறு ஆண்டு வருகிறார் என்றால்

செங்கோலைத்தான் பிடித்து—அந்த
தேசத்தை ஆண்டு வருகிறூர்
மகுடமுடிதான் தரித்து-அந்த
மாநிலத்தை ஆண்டு வருகிறூர்

(மகுடம் + பின்பாட்டு)

ஆறிலொரு கடமை வாங்கி
ஆராய்ச்சி மணிமுழங்க
நீதி தவருமல்
நேர்மை தவருமல் (மகுடம் + பின்பாட்டு)

அன்பு, ஆதரவு, ஈவு, இரக்கம், தயவு தாட்சண்யம் வைத்து வாழ்ந்தார்.

அதுமட்டுமின்றி........
வேறு எவ்வாறு...? (பின்பாட்டுக்காரர்)

அஞ்சாமை, ஈகை, அன்பு, ஊக்கம் இந்நான்கும் எஞ்சாமை வேந்தர்க்கு இயல்பு என்ற வள்ளுவர் வாக்கின்படி அம்மாநிலத்தை அம்மன்னன் ஆட்சிசெய்து வருகின்ருர். ஏனென்ருல் நீதிமுறை தவருமல் நேர்மை தவருமலே அம்மாநிலத்தை ஆண்டார். அதனுல் அந்தநாட்டிலே மாதம் மும்மாரி மழை பொழிந்தது. வருடம் முப்போகம் நெல்விளைந்தது.

நாட்டிலே பசுவும் புலியும் ஒரே துறையில் நீர் அருந்தியது. எலியும் பூனையும் ஏகராசியாக இருந்தது. கீரியும் நாகமும் ஒரே கூண்டிலே வாசம் பண்ணிக்கொண்டிருந்தது. மக்கள் அமைதியாகப் பசியின்றி வாழ்ந்து கொண்டிருந்தார்கள். அப்படியிருக்கின்ற மன்னனுக்கு ஏதாவது குறையிருக்கிறதாவென்ருல் ஒன்றுமேயில்லை ஒன்றுமே குறையில்லை.

அவருக்குத்தான்...
அங்கே சொத்தாலே குறையுமில்லை
மண்ணாலே குறையுமில்லை
மனையாள் தானுமில்லை

(மகுடம் + பின்பாட்டு)

முதலாம் நல்ல படித்தளமாம்
முக்கொழிக்கும் மேனிகளாம்
இரண்டாம் நல்ல படித்தளமாம்
இரத்தின வண்ண மேனிகளாம்
நல்ல மூன்ரும் படித்தளமாம் — அவர்க்கு
முத்துவண்ண மேனிகளாம் — அங்கே
நாலாம் படித்தளமாம்
அழகு நாகமுடிராஜனுக்கு
நாகரத்தினத்தால் வீடுகளாம்
(மகுடம் + பின்பாட்டு)
ஐந்தாம் படித்தளமாம்
பஞ்சவர்ண மேடைகளாம்
ஆரும் படித்தளமாம்
நாகமுடிராஜ மன்னன்
அலங்கார மேடைகளாம்

பொன், பொருள், சொத்து சுகம் முதலிய பவிசுகளுடன் ஆண்டு வருகிருன். அப்படிஆளுகிற மன்னனுக்கு ஒரே ஒரு குறையிருக்கிறது.

என்ன குறையிருக்கிறது? (பின்பாட்டுக்காரர்)

மக்களுக்கு யாதொரு குறையும் இல்லாமல் வாழ்ந்து வந்தார். ஆனல் அரண்மனையிலே ஒரு குறையிருக்கிறது.

நல்ல பவிசு இருக்க
ஒரு பவிசுதான் குறைஞ்சிருக்கு
மணமுடிச்சு இதுநாளாய்
மைந்தனொன்று இல்லையாம்
கைப்பிடித்து இதுநாளாய்
கண்மணிதான் இல்லையவர்க்கு

ராஜாதி ராஜனுகிய அந்த நாகராஜனுக்கு நாகக்கன்னி, தோகைகன்னி நளினக்கன்னி என்ற இந்த மூன்று கன்னிகளுக்கும் ... ...

முப்பது வருடமாகவே
முடிதரிக்கக் குழந்தையில்லை

நாற்பது வருடமாக—அவர்க்கு
நாடாளப் பிள்ளையில்லை—அந்த
நாற்பது வருடம் மட்டும்
அரசாளக் குழந்தையில்லை

(மகுடம் + பின்பாட்டு)

இதை யார் அறிகிருர்கள் என்றால், தேவிமார்களாகிய நாகக்கன்னி, தோகைக்கன்னி, நளினக்கன்னி மூன்று பேரும் அறிகிறார்கள். நாகமுடிராஜன் அந்தப்புரத்துக்கு வருகிறார். அந்த நேரத்திலே மனைவிமார்களைக் கண்ணிலே கண்டார்.

முற்காலத்திலே மன்னனைக் கண்டவுடன் பெண்கள் என்ன செய்வார்கள்?

என்ன செய்வார்கள்? (பின்பாட்டுக்காரர்)

பன்னீர் சம்பாவிலேப் பன்னீர்கோதி
பாதமதை விளக்கினாளே
தஞ்சாவூரு தலுகையிட்டு—அந்த
பெண்மணியும் பொற்பாதம் துலக்கினாள்

(மகுடம் + பின்பாட்டு)

மூன்று மனைவிமார்களும் நாகமுடிராஜமன்னனிடத்திலே வந்து நின்று கைகட்டி, கரம் கூப்பி, தலை சாய்த்து, வணங்கி பெண்களுக்கு உண்டாகிய அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு என்று சொல்லக்கூடிய குணங்களுடன் நின்று கொண்டு இருக்கிருர்கள்.

பெண்கொடியே வார்த்தையொன்று
சொல்லக் கேளாய்
வாடாத திருமுகங்களே
வாடிப் போய் இருப்பதென்ன?

(மகுடம் + பின்பாட்டு)

மாலை நேரத்திலே கதிரவனின் ஒளியைக் கண்ட செந்தாமரை மலர்ந்தால் பார்க்க அழகாய் இருக்கும்.

நல்லாத்தான் இருக்கும் (பின்பாட்டுக்காரர்)

இரவிலே மதிமுகத்தைக் கண்டால் கண்களுக்குக் காட்சியாயிருக்கும்.

நல்லாத்தான் இருக்கும் (பின்பாட்டுக்காரர்)

உங்கள் திருவதனங்கள் ஏன் வாடியிருக்கிறது என்று அந்த மன்னன் கேட்ட வார்த்தைக்கு மங்கையர்கள் உரைக் கிறார்கள்.

என்ன வார்த்தை உரைக்கிறார்கள்? (பின்பாட்டுக்காரர்)
சுவாமி! நாதா! பிராணபூபதியே! இந்நாட்டிலே என்னை மாலைமணம் சூடி, நாம் நான்கு பேர்களுக்கும் எத்தனை ஆண்டுகாலம் எடுத்தாள்வதற்கு ஒரு குழந்தையில்லாமல் மாநிலத்தை ஆண்டு வருகிறோம்? எங்களைப் பார்த்துப் பெண் களெல்லாம் பேசுகிறார்கள்.

என்ன பேசுகிறார்கள்? (பின்பாட்டுக்காரர்)

பிள்ளையில்லாத பாபி என்று
பெரியவர்கள் பேசுகிறார்கள்
மழலை யில்லாத பாபி என்று
மாநிலத்தில் பேசுகிறார்கள்
குழந்தையில்லாத பாபி என்று
குவலயத்தில் பேசுகிருர்கள்
இருசி நல்ல மலடி என்று
எல்லோரும் பேசுகிறார்கள்

(மகுடம் + பின்பாட்டு)

மந்திரிகளாகிய அந்த முனிவர்களும் சொல்ல அந்த மன்னனாகிய நாகமுடிராஜன் தன் மனைவிமார்களுக்கு ஆறுத லைச் சொல்லிவிட்டு, பிள்ளைவரம் வேண்டி சிவனை நினைத்துத் தவமிருக்கிருர். எப்படி செய்கிறார் என்றால் யாருமறியாத கானகத்திலே வந்து நாகமுடி ராஜாதிராஜ மன்னன் அருமைப் பிள்ளையொன்று வேண்டுமென்று ஆண்டவனாகிய சிவ பெருமானை நினைத்துத் தவமிருக்கப் போகிறார்.

எப்படித் தவமிருக்கப் போகிறார்? (பின்பாட்டுக்காரர்)

சாணி கொண்டு தரைமொழுகி—அந்த
சந்தனத்தையும் கலந்துதான் மொழுகி
கோலமிட்டு வாசலிலே
தலைவாழையும் கரும்பும் கட்டி
....................................................
...................................—அந்த

செப்புரத குடத்திலிட்டு – அந்தச்
செப்புநிறைய செவ்வரளி தேங்காய்வைத்து அந்த
செவ்வரளித் தேங்காய் மேலே
எலுமிச்சங்கனியை வைத்து—அந்த
எலுமிச்சங்கனியின் மேலே
கொலுமிச்சங்கனியை வைத்து – அந்த
கொலுமிச்சங் கனியின் மேலே
கோழிமுட்டையைத் தான்வைத்து –அந்த
கோழிமுட்டை மருப்பின்மேலே—அந்த
குண்டுமணியைத்தான் வைத்து – அந்த
குண்டுமணிமருப்பின் மேலே—அந்த
ஊசிகளைத் தான் வைத்து
உடையவனைதான் அழைத்து—அந்த
தவமது புரிந்துவருகிறார்.

(மகுடம் + பின்பாட்டு)

ஆண்டவனாகிய பகவானே! சங்கரன்! சதாசிவன்! நிமிலன்! இறையவன்! சங்கராபரணன்! சந்திரசேகரன்! அடியார்க்கு இனியவன்! காலகாலன்! காலச்சந்திரசூடன்! காமாரகன்! சஞ்ஜாலன்! திரிபுராணந்தன்! திரிலோகநாதன்! திரிசூலன்! திகம்பரன்! திருமால்வள்ளுவன்! கபாலகன்! விபூதி, ருத்திராட்ச, மாலை ஆபரணங்களைக் கழுத்திலேஆபரணமாகக் கொண்டு, யானைத்தோல் போர்வையும், புலித்தோல் உடையும், அணிந்த அந்த சாட்சாத் சிவபெருமானை நினைத்துத் தவமிருக்கிறார். ஈராறாண்டு காலம் தவமிருக்கிறார். அவருடைய தவம் ஆண்டவனாகிய சிவபெருமானுக்குத் தெரிகிறது. அவனுக்கு தான் வரமளிக்க வேண்டுமென்று அழைக்கிறார்.

நந்திதேவனைத்தான் வரவழைத்து
பகவான் சொல்கிறார்
சொல்லக்கேளாய் — அந்த
இராஜமுடி பக்தன் தானே
கடுந்தவம் புரிந்து வர்ரான்
தவமிருக்கும் பக்தனைத் தான்
தானே போய் அழைத்துவாராய்

மைந்தன் நீதான் என்று
பகவான் தானும் சொன்னார்
பகவான் சொல்லக் கேட்டு
அந்தப் பக்தியுடன் ஓடிவாரான்
வானமென்னும் வீதியின் வழிவாரான்
அவர் புகழுடன் ஏகிவாரான்

(மகுடம் + பின்பாட்டு)

அந்த நந்திதேவன் வந்து நாகராஜனை அழைத்து வருகிருன். பக்தனைக் கண்ட பகவான் கேட்கிறார். ஏன் தவமிருந்தாய்? ஏனப்பா தவமிருந்தாய்? (பின்பாட்டுக்காரர்)
என்ன வரம் வேண்டுமென்று பகவான் கேட்க, பக்தன் உரைக்கின்றார்.

சுவாமி! நான் எதற்காக தவமிருந்தேன் என்றால்,

நாடு வேண்டாம்: நகரம் வேண்டாம்;
பொன் வேண்டாம், பொருள் வேண்டாம்;

பகவான், என்ன வேண்டும்? கேள் அதைத் தருகிறேன் என்றார்.

மணமுடித்து இந்நாளாய்
மதலைப் பாக்கியம் எனக்குஇல்லை
கைப்பிடித்த இந்நாளாய்
கண்மணி எனக்கில்லை என்று
கடுந்தவம் புரிந்தேன்

பக்தா! உனக்குக் குழந்தை இருக்கிறதா? இல்லையென்பதா? என்பதை நாம் அறியவேண்டுமென்றால் இந்நாட்டுக்கு கணக்கெழுதும் சித்திரகுப்தநாயனாரை அழைக்கவேண்டும். அவரிடத்திலே இன்னாருக்கு இன்னபடி என்ற அமைப்பு இருக்கிறது. அதனால் அந்த சித்திரகுப்தநாயன்ாரை அழைத்து நாகராஜன் ஜாதகத்தையும், நாககன்னிகள்ஜாதகத்தையும் சிவபெருமான் உரைத்தார்.

ஆண்டவனின் முகத்தைப் பார்த்து
அருமை சித்திரகுப்த நாயனார் உரைக்கிருர்.

இந்த நாககுமாரனாகிய ராஜமன்னன் எத்தனை பிறவி பிறந்தாலும் அவனுக்கு எடுத்தாள்வதற்குப் பிள்ளை இல்லை என்றும் மாறிமாறிப் பிறந்தாலும் மைந்தன் இல்லை என்றும் ஏழு பிறவி பிறந்தாலும் எடுத்தாள்வதற்குப் பிள்ளை இல்லை என்றும் அந்த நாயனார் உரைக்கிறார். உடனே பகவான் பக்தன் முகத்தைப் பார்க்கிருர். பக்தன் குழந்தைவரம் இல்லையென்ருல்...

நான்
நாட்டிற்குச் செல்லவே மாட்டேன் — என்
நானிலத்தை ஆளவே மாட்டேன்
குழந்தை வரம் வாங்காமல்
குவலயத்தை ஆளவேமாட்டேன்
பிள்ளைவரம் வாங்காமல்
பேருலகை ஆளவே மாட்டேன்
மதலை வரம் வாங்காமல்
மாநிலத்தை ஆளவே மாட்டேன்
ஆண்டவா............

(மகுடம் + பின்பாட்டு)

சங்கரா, சதாசிவா, நிமிலா, இறையவா, சங்கராபரணா' ஆண்டவா. பிள்ளைவரம் வாங்காமல் உலகிற்குப் போகமாட்டேன். என் உயிரை வேண்டுமானாலும் மாய்த்துக்கொள்கிறேன். வரம் கொடுக்க வேண்டுமென்று பார்வதி கூறுகிருள்.

உண்மைதான் பார்வதி. நான் இல்லை என்றேன் நீ கொடுக்கவேண்டுமென்று கூறுகிறாய். ஆனால் முன்னால் ஒரு நேரத்திலே நான் கொடுத்தேன் அல்லவா? சாபம். என்னைப் பரிசோதனை செய்தாய் அன்று-நான் மூன்று சாபமிட்டேன். முதலாவது சாபம் அத்திநாட்டை ஆண்டு வரக்கூடிய தட்சனுக்கும் தாருகா தேவிக்கும் பெண்ணாகவே அதாவது மகளாகவே பிறந்தாய்.

தட்சனுக்கு மகளாகவேப் பிறந்தாய் (பின்பாட்டுக்காரர்)

தக்க வயதிலே நான் ஆண்டி வேடம் பூண்டு மாலைச் சூடிக் கொண்டேன். ஆனால் இரண்டாவது பிறவி கலி யுகத்தை ஆள்வதற்கு அட்டகாளியாகப் பிறக்க வேண்டும்

என்று சொன்னேன் அல்லவா? ஏன் சொன்னேன். மகிடாசுரன் என்பவன் அகத்திய மகாமுனிவரை மதியாமல் இருந்ததால் அகத்தியர் கொடுத்த சாபத்தால் மகிடாசுரனாக இருக்கிறார். அவனை அதம் செய்யவேண்டும்.

ஏன் செய்யவேண்டும் (பின்பாட்டுக்காரர்)

ஏன் செய்யவேண்டும்? ஆயிரம் ஆண்டு காலம் அழிவில்லாத வரம் பெற்றவன். ஆனால் இன்று ஆயிரம் ஆண்டு முடியப் போகிறது. ஏன்? ஆண்களால் அழிவில்லாத வரத்தைப் பெற்றான். எல்லா வரத்தையும் பெற்றான். ஒரு வரத்தை மறந்து விட்டான்.

என்னவரம்? (பின் பாட்டுக்காரர்)

பெண்ணால் அழிவுக்காலம் என்பதை அவன் கேட்க மறந்து விட்டான். அவன் அந்த வரத்தை வாங்கவில்லை, அவனை அதம் செய்ய வேண்டுமென்றால் காளியாகவேப் பிறந்து நீ சென்றுதான் அவனை அதம் செய்ய வேண்டும். இந்த நேரத்தில் நீ தான் நாகராஜனுக்கு அட்டகாளியாகப் பிறக்கவேண்டும், அவதரிக்கவேண்டும். அதம் செய்யவேண்டு மென்று ஆண்டவனாகிய சிவபெருமான் சாபம் கொடுத்தார்.

அந்த நாகமுடிராஜாதிராஜமன்னன் நாகலோகத்திற்கு வந்தான். மங்கைமார் மூன்று பேர்களும் மன்னனை அரண்மனைக்கு அழைத்துச் சென்றார்கள் நாதா! இத்தனை காலம் தவமிருக்க சென்றீர்களே ஆண்டவனைக் கண்டீர்களா? பிள்ளை வரம் வாங்கி வந்தீர்களா? ஆமாம் பெண்ணே! ஆண்டவனைக் கண்டேன். பெரிய தவம் புரிந்தேன். பெண் குழந்தை வரம் தந்திருக்கிறார் என்று தீர்த்தப் பிரசாதத்தை மங்கைமார் கையிலேக் கொடுத்தார். பகவானை நினைந் துருகிப் பெண்கள் அதை அருந்துகிறார்கள். ஆண்டவன் கிருபையினால் அந்த ஆயிழை மூன்று பேர்களும் அதை அருந்தியவுடன்

ஆயிழை கற்பமாய்
நாற்பது நாளாய் — அந்த

நாகக் கன்னி மீன்கொடியாள்
முதலான அவர்கள்
இட்டார்கள் மூன்றுமுட்டை
இட்ட முட்டை பொரியணும்னு
இரையும் புல்லும் எடுக்காமலே
நாற்பது நாளாக அடைகாத்து இருந்தார்கள்.
அந்த நாற்பது நாளையிலே
நாதனுடைய கிருபையினாலே
அந்த முட்டை இரண்டாய்க் கருவாகி - அந்த
காளி வந்து பிறக்கும் போது – அந்த
முதலாவது முட்டையிலே
ஔவை முத்தாரச்செல்லி அம்மன்
இரண்டாவது முட்டையிலே
காளிவந்து பிறந்தாள்
மூணாவது முட்டையிலே
மூன்று நல்ல முகத்தோடும்
அம்மை முப்பிடாதிதான் பிறந்தாள்
(மகுடம் + பின்பாட்டு)

அட்டகாளி எட்டுப்பேர்களும் கலியுகத்திலே
காளியாகத் தெய்வமாகவேப் பிறந்திருக்கிறார்கள்.
மகிடாசுரன் ஆண்டு வருகிறான்
எங்கே ஆண்டு வருகிறான்? (பின்பாட்டுக்காரர்)

மகேந்திரபுரி மலையிலே ஆண்டு வருகிறான்.
எப்படி ஆண்டு வருகிறான்? (பின்பாட்டுக்காரர்)

ஆயிரம் வருடத்திற்கு அழியாத வரம் வாங்கி
வைத்திருக்கிறான்

அதுமட்டுமல்லாமல் தேவர்கள், மூவர்கள், முனிவர்கள் எல்லோரும் வந்து அவனுக்கு அடிபணிந்து நமஸ்காரம் செய்கிறார்கள். அப்படி செய்து கொண்டிருக்கும் மகிடாசுரன் இன்னும் என்ன செய்கிறான். மேருமலை மீது தலை வைத்து, கீழே சமதளத்திலே காலை வைத்து நீட்டி நித்திரை புரிந்து வருகிறான். மலை படுத்தார் போல உறங்குகிறான்.

மது குடித்த வெறியாலே
மயக்கத்துடன் தூங்குகிறான்
கள் குடித்த வெறியாலே
கனவுலகத்தில் உறங்குகிறான்

இப்படி உறங்குகின்ற மகிடாசுரனை காளிகாதேவியானவள் அதம் செய்ய வேண்டுமென்று விரும்புகிறாள்!

ஆண்டவனே! சொல்லக் கேளாய்!
மகிடன் நல்ல சூரனைத்தான்
அதம் செய்ய வேண்டுமென்று
ஆயுதங்கள்தான் தேவைஐயா
ஆயுதங்கள் தந்தால்
அவன் தலையை அறுத்துவிடுவேன் — என்று
ஆயிழையாள் கேட்டபோது
அதனறிந்த சிவபெருமான்
விஸ்வகர்மாவை வரவழைத்து
விஷ்ணுபெருமானையும் வரவழைத்து
மூன்று நல்ல சூலமது
முகனையுடன் உண்டுபண்ணி
முக்கண்ணியம்மாளை வரவழைத்து
வாடியம்மா காளியரே
வாராயம்மா காளியரே
.......................................
முக்கண்ணியைத் தந்தேனடி
மகிடனைத்தான் வதம் செய்து
மாகாளி நீ வரவேண்டுமென்று
சொல்லும் வேளையிலே
பார்த்தாளே காளியவள்
இன்னும் சில வரமிது

வேண்டுமென்று ஆண்டவனிடத்தில் கேட்கிருள். பகவானே! கால்நடையாகவேப் போகமாட்டேன். வாகனங்கள் வேண்டுமென்று கேட்கிறாள். காட்டிலே வாழ்கின்ற சிங்கத்தை வரவழைத்து அவளுக்கு வாகனமாகவேக் கொடுக்கின்ருர். தூதுபோய் வருவதற்குத் துணைமகள்தான் வேணு

மையா. தாய்க்கு நல்ல தலைமகன் நல்ல தாட்டியமாக வேணுமையா. யாரை வரவழைக்கிருர் என்றால் வயிரவ நாதனை அனுப்புகிருர். ஆண்டவனாகிய பகவான் வார்த்தையைக் கேட்டு சிங்கவாகனத்தில் ஏறி மகிடாசுரன் கோட்டையிலே மாகாளி வாராளே.

காளிகாதேவி வந்து பார்க்கிறாள். மது குடித்த வெறியினால் மயங்கி உறங்குகிருன். இப்படி உறங்குகின்ற மகிடாசுரனைத் தூக்கத்திலே கொல்லவே கூடாது. கொன்றால் தோஷம் வந்துவிடும். உறக்கத்திலே கொன்றால் ஒருவருமே தம்மை அறியமாட்டார் என்று நினைத்த காளி மகிடாசுரனை விழித்தெழச் செய்து அவனை அதம் செய்து கொல்கிறாள். வேதாளத்தை வரவழைத்து உதிரத்தை வாங்கச் சொன்னாள். மகிடாசுரனின் உடலில் இருந்து ஒரு சொட்டு இரத்தம் கீழே விழுந்தால் ஓராயிரம் மகிடன் பிறப்பானல்லவா? இரண்டு சொட்டு இரத்தம் கீழே விழுந்தால் ஈராயிரம் மகிடன் பிறப்பானல்லவா? ஆகவே உதிரம் கீழே விழாமல் அவன் தலையை அறுத்து மணிக்குடலதுவைப் பிடுங்கி மாலையாகவே போட்டு மகாதேவன் இருக்கின்ற இடமாகிய அந்த மாணிக்கக் கைலையங்கிரிக்கு வருகிறாள். மகாதேவன் கண்ணாலே கண்டார்.

மகிடாரசுரனைக் கொன்றதற்காக சிவபெருமானிடம்வரம் கேட்கிறாள் காளி.

என்ன வரம் கேட்கிறாள்? (பின்பாட்டுக்காரர்)

ஆண்டவா! தாங்கள் சொன்ன பிரகாரம் மகிடாசுரனை அதம் செய்து வந்தேன். என்னை பூலோகம் செல்ல வேண்டுமென்று உரைக்கிறீர்கள் அல்லவா? சென்று வருகிறேன். ஆனால் நான் கேட்டவரம் எனக்கு வேண்டும்.

நிச்சயமாக வேண்டும். (பின்பாட்டுக்காரர்)

என்ன வரம் வேண்டும்? சாதாரண வரம் ஒன்றுமில்லை.

முத்துச் சிந்தி விளையாட முக்கண்ணனே வரவேண்டும்.

முத்து வரம் தருவீரா
தருவீரானால் ... ... ...
முக்கண்ணனே போய்வாரேன்

(மகுடம் + பின்பாட்டு)

முத்துவரம் கேட்டவுடனே ஆண்டவனாகிய பகவான் வருவது தெரியாமல் வரம் கொடுக்கிறார். முத்துப் பட்டறையைத் திறந்து இராம, லட்சுமணன் என்ற களஞ்சியத்தைத் திறந்து முத்துக்களைக் கொடுக்கிறார். கொடுத்த முத்தைச் சோதிக்க வேண்டுமென்று காளிகாதேவி ஆனவள் நினைத்தாள்.

யார் மேலே போடலாம்
பூமி யிலே போட்டால்
பூமாதேவி பொறுக்கமாட்டாள்
கங்கையிலே போட்டால்
கங்காதேவி பொறுக்க மாட்டாள்
ஆகாயத்திலே போட்டால்
ஆகாயதேவனும் பொறுக்கமாட்டான்
பர்வதாதேவி மேல் போட்டால்
பர்வதாதேவியும் பொறுக்கமாட்டாள்
தேவர்கள் மேல் போட்டால்
தேவாதி தேவர்களும் பொறுக்கமாட்டார்கள் அல்லவா

ஒருவேளை கொடுத்தவரம் நல்லவரமாக இருந்தால் ஆண்டவர் மேல் போட்டுச் சோதிக்க வேண்டுமென்று காளிகாதேவியான வள் நினைக்கிறாள். ஐந்தாறு முத்தெடுத்து பகவான் மேலே போடுகிறாள்.

முத்துப்பட்ட முந்தாநாளே
முக்கண்ணனார் பெருமகனுக்கு
முக்குளிர விரயக்காய்ச்சல்
காய்ச்சல் அடித்த மூன்றாம் நாளாகக்
கண்டிடுமாம் சிச்சிலுப்பை
உச்சியிலே விழுந்த முத்து
உச்சிப்பிழையாகி விடுமாம்
நெற்றியிலே விழுந்தமுத்து
நெற்றிச்சுட்டியாக மாறிடுமாம்
மூக்காதியிலே வி ழுந்தமுத்து — அந்த
முக்கண்ணன் பகவானுக்கு
மூக்கடைப்பானாகி விடுமாம்
அரையிலே விழுந்த முத்து
அரைக்காப்பாக மாறிடுமாம்
பாதத்திலே விழுந்தமுத்து
பாதச் சக்கரம்போலாகி விடுமாம்

இப்படியாக பகவான் படும் துன்பத்தை பார்வதிதேவி கண்டாள். ஆண்டவன் படும் துன்பத்தை அவளால் பார்க்க முடியவில்லை. அந்த பார்வதிதேவி என்ன செய்கிறுள் என்ருல்

சாயாத வாழையிலே
தலைவாழைக் குருத்தெடுத்து
ஈனாத வாழையிலே
இலைவாழைக் குருத்தெடுத்து

(மகுடம்+பின்பாட்டு)

சங்கரனாகிய பகவானை அதிலேக் கிடத்தி மஞ்சளையும் தண்ணீரையும் மகாதேவனுக்கு வைத்துவிட்டுப் போட்ட

முத்தை எடுக்க வேண்டும், ஐயா தேவர்களே! பகவானைப் பார்த்துக் கொள்ளுங்கள் என் அண்ணனாகிய அந்த நவநீதக் கோபாலன், வைகுந்தன், பச்சைமாலாகிய அந்த பரமாத்மா தான் கொடுத்த வ ரத்தை அழிக்க வேண்டும். அழிக்க முடியும் ஏனென்றால் ஆண்டவன் பகவானுக்கு வரம் கொடுக்கத்தான் தெரியும். கொடுத்த வரத்தை அழிக்க வேண்டுமென்றால் என்னுடைய அண்ணனால்தான் முடியும். அதனால் அந்தக் கடலாடி என்று சொல்லக்கூடிய ஐந்து தலைநாகம் ஆதி சயனத்திலே பள்ளி கொண்டிருக்கிற எம் பெருமானாகிய ஆயிரக் கண்ணனை அழைத்துவருகிறேன் என்று பார்வதா தேவி தேவர்களைக் காவல் வைத்துவிட்டு அங்கு வருகிறாள்.

பார்வதியின் சொல்கேட்டு வந்தான் நவநீதன். காளிகா தேவியின் கையிலே வேப்பங்குழையக் கொடுத்து முத்துக்களை இறக்குகிருர். பின் என்ன செய்கிருர் என்ருல் முத்துக்களைக் கபடமாக வறுத்துக் கொடுக்கிருர். அப்படிக் கொடுத்த முத்து வரத்தை வாங்கிய காளிகாதேவி பூலோகத்திலே நிலையம் வாங்குகிருள்.

(மகுடம் + பின்பாட்டு)

—— ——



## ஆசிரியரின் பிற நூல்கள்

1. தமிழர் நாட்டு விளையாட்டுகள்
(நாட்டுப்புறவியல்)

2. சி. சு. செல்லப்பாவின் வாழ்க்கையும் கலையும்
(தற்கால இலக்கியம்)